# காஞ்சிமா தேவி

ஆசிரியர்

## கோவைகிழார்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் பேரூராதீனம் கயிலைப்புனிதர் திருப்பெருந்திரு சாந்தலிங்க மருதாசல அடிகளார் அவர்களின் அருளாணையின் வண்ணம் திருவள்ளுவராண்டு 2053 சுபகிருது ஆண்டு ஆவணித்திங்கள் 11ஆம் நாள் (27.08.2022) அருள்திரு சாந்தலிங்கப் பெருமான் மாதக்குருபூசையான மகம் நாளன்று தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகத்தால் வெளியிடப்பெற்றது.

**தவத்திரு சிதம்பர அடிகளார் நூலக வெளியீடு**
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி
பேரூர், கோவை - 641 010.

விலை ரூ.75/-

# பதிப்புரை

இன்ப அன்பினீர்,

சாந்தலிங்கப்பெருமான் இன்னருள் பெருகுக. நமது கொங்குநாடு பல்வேறு சிறப்புகளையுடையது. இதனை ‘குலாவு சிறப்பெய்தியது கொங்குவள நாடு’ என்று கச்சியப்ப முனிவர் சிறப்பிக்கின்றார். அத்தகைய சிறப்புகளுள் கொங்குநாட்டின் இயற்கை அமைப்பு குறிப்பிடத்தக்கது. அவற்றுள் நொய்யல் என்று வழங்கப்பெறும் ‘காஞ்சிமா நதி’ பெருஞ் சிறப்புக்குரியது. அது, ‘மீ கொங்கில் அணிகாஞ்சி’ என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய பெருமையது. அங்ஙனம் சிறப்புமிக்க காஞ் சிமா நதி மற்றும் கொங்குநாட்டின் அருமைகளை நம் கல்லூரி மாணவரிடத்தில் காஞ்சிமா நதியே பகிர்ந்து கொள்வதாக அமைவது ‘காஞ்சிமா தேவி’ என்னும் நூலாகும். வரலாற்றுப் பேரறிஞர் கோவைகிழார் அவர்கள் இந்நூலைப் படைத்துள்ளார். கோவைகிழார் நமது ஆதீனக் கல்லூரியின் முதல் முதல்வராக இருந்து வழி நடத்திய சிறப்புக்குரியவர். கல்லூரி மாணவர்கள் நமது கொங்குநாடு மற்றும் காஞ்சிமா நதியின் தன்மைகளை உணர்ந்து கொள்ளும் வகையில் மிக எளிமையாக நாடக வடிவில் அந்த வரலாறுகளை எல்லாம் விளக்கியுள்ளார். ஒரு நதி தன்வரலாற்றைத் தானே கூறும் பான்மையில் அமைந்துள்ள இந்நூல் ஒரு அரிய வரலாற்றுப் பெட்டகமாகும். மாணவர்கள் மட்டுமின்றி அனைவரும் கொங்குநாட்டுச் சிறப்புகளை விளங்கிக் கொள்ளும் வகையில் இந்நூல் அமைவது சிறப்புக்குரியது.

அத்தகைய ‘காஞ்சிமா தேவி’ என்னும் இந்நூல் ’தவத்திரு சிதம்பர அடிகளார் நூலகத்தின்’ வழியாக ஆவணித்திங்கள் மகம் நாளன்று (27.08.2022) வெளியிடப்பெறுவது மகிழ்வுக்குரியது. இந்நூலின் புரவலர்களாக முனைவர் திருமதி. வெ.இராசேசுவரி திரு. சண்முகம் ஆகியோர் விளங்குகின்றார்கள். முனைவர் வெ.இராசேசுவரி அவர்கள் நமது கல்லூரியில் தமிழ்த்துறை இணைப் பேராசிரியராகவும் துறைத் தலைவராகவும் முதல்வராகவும் பணியாற்றிய சிறப்புக்குரியவர். பணியாற்றிய காலத்தில் மாணவர் மேம்பாட்டுக்காகவும் கல்லூரி வளர்ச்சிக்காகவும் பலவகையிலே முனைந்து செயல்பட்டவர். அவர்களுக்கு நம்முடைய பாராட்டுகளைத் தெரிவிக்கின்றோம். இந்நூலை அச்சிட்டு உதவிய கவின் பதிப்பகத்தாரும் இதனை வெளிக்கொணர்வதில் முனைந்து செயல்பட்ட கல்லூரி நூலகர் முனைவர். திருமதி. அபிராமி அவர்களும் துணை நின்ற அன்பர்களும் எல்லா நலங்களும் வளங்களும் பெற்றுப் பெருவாழ்வு வாழ அருள்மிகு அம்பலவாணப் பெருமான் இன்னருளையும் சாந்தலிங்கப்பெருமான் தண்ணருளையும் கயிலைக்குருமணி இருபத்து நான்காம் குருமகாசந்நிதானங்களின் குருவருளையும் நினைந்து வாழ்த்தி மகிழ்கின்றோம்.

வேண்டுந்தங்களன்பு

அன்புள்ள

சாந்தலிங்க இராமசாமி அடிகள்

# காஞ்சிமாதேவி

## தோற்றுவாய்

இது ஒரு ஆற்றின் கதை. ஆறுகள் நமக்கு உயிரை ஊட்டும் நீர்ப் பகுதிகள். ஆகவே, அவைகளை நமது அன்னையர்களாகப் போற்றுகிறோம். அப்படிப்பட்ட அன்னைத் தேவியே தன் வரலாற்றினை ஒரு மாணவனுக்கு உரைக்கும் முறையில் இவ்வுரையாடல் கதை எழுதப்பெற்றுள்ளது. மாணவ மாணவிகள் நடித்துக் காட்டும் முறையில் எழுதப்பட்டுள்ளது. வரலாற்றுப் பகுதி மாணவர்களுக்கு மிகவும் பயன்படும். சில நாட்களுக்கு முன் வானொலிப் பகுதியில் கன்னட மொழியில் இதைப் போன்ற ஒரு உரையாடல் 'துங்கபத்ரா தேவி' என்ற தலைப்பில் வெளி வந்தது. அதுபோலவே எங்கள் கல்லூரி மாணவர்களுக்குப் பயன்படும் முறையில் இக்கல்லூரியை அணித்துள்ளதான நொய்யல் ஆற்றைக் குறித்து இவ்வுரையாடல் எழுதப்பட்டுள்ளது. இதனால் பல அரிய செய்திகள் கல்லூரி மாணவர்களுக்குப் புலனாகும். இதனை மாணவர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

**கோவைகிழார்**

பேரூர் தமிழ்க்கல்லூரி

கோவை 29-5-1957

.

கடவுள் துணை

# காஞ்சிமாதேவி

**காட்சி 1 ]** **[ பெயர்**

[நொய்யலாற்றங்கரையில்....தென்னந் தோப்பு...பகல் வெய்யில்...ஆனால் குளிர்ந்த தென்றல்......கல்லூரி மாணவன்... அவன் கரத்திலே காப்பிய நூல் ஆனாலும் முகத்திலே அயர்வுக் குறி!]

**அசரீரி**: அருமைக் குழந்தாய்! நலம் பெருகுக! அறிவு வளர்க! அமைதி நிலைக!

**மாணவன்**: இது யாருடைய குரல்? எவர் பேசுகிறார்கள்? ஒருவரையும் காணேனே. என்ன வியப்பு!

**அசரீரி**: மாணவ! என்னை அறியாயோ? நான் எப்போதும் உன் அருகிலேயே சஞ்சரிக்கின்றேன். உன்னைப் போன்ற அருமை மக்களைப் போற்றிப் பாதுகாக்கவே எல்லா வகை உதவியும் உணவும் உனக்கும் உன்போலியர்க்கும் தந்து வருகின்றேன்.

**மாணவன்**: ஒரு தேவியின் குரல் போல் தோன்றுகிறது. தேவி! நீ யார்? என்னை எவ்வாறு அறிவாய்? எனக்கு எவ்வாறு உதவுகின்றாய்?

**அசரீரி**: மகனே! நான் உனது கல்லூரிக்கு அருகில் சஞ்

சரிக்கும் நொய்யல் ஆற்றின் அதிதேவதை. என்னைக் காஞ்சி மாதேவி என்பார்கள். உன்னுடன் உரையாடவே வந்தேன்

**மாணவன்**: தேவி ! எளியேன் மீது கருணை கூர்ந்து உரையாட வந்தது பற்றி மகிழ்கிறேன். இதற்கு அடியேன் செய்த தவம் யாதோ?

**தேவி**: மாணவ! அப்படி நினைக்க வேண்டாம். நீ மட்டும் அல்ல. உனது தோழர்களும் என் கரையை அழகு படுத்தும் பொழில்களை நாடி உயர்ந்த தமிழ் அறிவு பெற வந்திருப்பதே நற்செய்தி ஆகும். தமிழறிவு மட்டுமல்ல. சிவஞானமும் பெற்றுத் தூய வாழ்வு வாழ எண்ணி அந்தக் குறிக்கோளோடு புனித இடமாகிய தவத்திரு சாந்தலிங்க அடிகளார் நிலையத்தில் பல்கலையறிவு பெற வந்திருப்பது என்னையே வந்தனை செய்வதாகும். அப்படிப்பட்ட ஒருமைப்பாடுடைய மாணவர்களுக்குத் தக்க உதவி செய்வது எனது அருட்கடமையல்லவா? பரம தந்தையின் அருளால் நீங்களும் உங்கள் கழகமும் நன்கு ஓங்குவீராகுக!

**மாணவன்**: தாயே! காஞ்சி மாதேவி என்ற ஒரு திரு நாமம் கொண்டு நீ விளங்குவதன் அடிப்படைக் காரணம் என்னவோ?

**தேவி**: அருமை மகனே! உனக்குப் பல அரிய செய்திகளை உணர்த்த வந்தேன். நீயும் அதற்குத் தக்கபடி வினாக்களையும் கேட்கிறாய். என்னைப் பொதுமக்கள் நொய்யல் என்றே அழைப்பார்கள். நொய் என்றால்

உனக்குத் தெரியுமல்லவா?

**மாணவன்**: நொய் என்றால் நுண்மை, சிறுமை; இரவையை கோதுமை நொய் என்கிறோம் அல்லவா?

**தேவி**: ஆம் மகனே. நொய் போலச் சிறியவள் யான். கங்கை, யமுனை, சிந்து, கோதாவரி, கிருஷ்ணை, காவிரி, நர்மதை போன்ற பெரிய ஆறுகளுக்கு ஒப்பிட்டுப் பார்த்தால் யானோ மிகச் சிறியவள். நொய் போன்றவள். தானியத்தில் நொய்யிற்குச் சத்து மிகுதி. அதுபோல அந்தப் பேராறுகளில் ஆயிரத்தில் ஒரு பங்கும் மக்களுக்குப் பயன் ஆவதில்லை. நானோ நூற்றுக்கு நூறு பயன் ஆவேன். அதில்தான் சிறப்பு இருக்கிறது. ஆகவே நொய்யல் என்ற பெயரே எனக்கு விருப்பம்.

**மாணவன்**: தேவி! எவ்வாறு நூற்றுக்கு நூறு பயன் தருகின்றாய் என்று விளங்கவில்லையே.

**தேவி**: புதல்வ! உங்கள் கல்விக் கழக நிலையத்திற்கு அருகே ஒரு அணை இருக்கிறதே அறிவாயா?

**மாணவன்**: ஆம் மாதேவி! இருப்பதை அறிவேன்.

**தேவி**: அது எப்போது ஏற்பட்டது, அதனால் என்ன பயன் என்று தெரியுமா?

**மாணவன்**: தெரியாது தேவி! அருள் செய்வாயாக!

**தேவி**: அந்த அணை கொங்குச் சோழர்கள் காலத்திற்கு

முந்தியே கட்டப்பட்டது. அதிலிருந்து கால்வாய் பிரிந்து சென்று நெல் வயல்களுக்குப் பாய்ந்து இறுதியில் பெரிய குளத்தை நிரம்பச் செய்கிறது. இந்தக் கால்வாய் அதி ராசராச வாய்க்கால் என்று 13-ஆம் நூற்றாண்டுப் பேரூர்ச் சாசனம் கூறுகிறது. இதைப் போன்ற அணைகள் 16-யும் கால்வாய்கள் பலவற்றையும் பண்டைய மன்னர்கள் பண்பாடு நிறைந்த அரசியல் கொள்கையினால் வகுத்திருக்கிறார்கள். பல நூற்றாண்டுகளாக இந்த விதமான நீர்ப்பாசன வசதிகளால் ஒரு சொட்டு நீரும் வீணாவதில்லை. ஆகவே நான் நொய் போன்ற சத்து ஈபவள் என்று மக்கள் எனக்குப் பெயர் இட்டார்கள்.

**மாணவன்**: அம்மையே! என்ன அற்புத விளக்கம். இது வரை இந்த விளக்கத்தை எனக்குச் சொல்வாரில்லையே. இனிக் காஞ்சி என்பதன் பெயர் எப்படி வந்தது என்று கூறியருள வேண்டும் தாயே.

**தேவி**: தமிழ் மாணவ! காஞ்சி என்ற சொல் உன் இலக்கியத்தில் வருவதில்லையோ?

**மாணவன்**: ஆமாம் தேவி! எனது அறியாமையை மன்னிக்க வேண்டும். காஞ்சி என்ற சொல் ஒரு நகரின் பெயர். பாரத நாட்டு ஏழு முத்தி நகரங்களுள் தமிழ் நாட்டுக் காஞ்சி சிறந்தது; “நகரேஷு காஞ்சி” என்பது ஒரு பழமொழியாகிவிட்டது. மற்றும் தமிழ் இலக்கணத்தில் காஞ்சி என்பது ஒரு திணை. புறப்பொருள் வெண்பா மாலையில் அது விளக்கப்பட்டிருக்கின்றது. மேலும் இலக்கியத்திலும் முதுமொழிக் காஞ்சி, மதுரைக் காஞ்சி என்ற சங்க நூல்கள் இருக்கின்றன. இவைகள் காஞ்சித்

திணையின் பால் வந்துள்ளன.

**தேவி**: மாணவ! நீ நன்கு படித்துள்ளாய். காஞ்சியின் பொருளை நன்கு அறிவாய். அதனை ஒரு பெயருக்கு ஒட்டி வைத்து பொருளை விளக்க முடியாதா? நீயே சொல்வாய். அதற்கு முன் மற்றொன்றறிவாயா?

**மாணவன்**: அது என்ன தேவி?

**தேவி**: என்றன் பெயருக்குக் கல்வெட்டுச் சான்றும் உண்டு. அதனை அறியாயோ?

**மாணவன்**: ஆமாம் தேவி. எங்கள் வரலாற்று நூலிலும் சைவ இலக்கியத்திலும் வந்திருக்கின்றன.

**தேவி**: அவற்றை நினைவுபடுத்திக்கொள், மாணவ! :

**மாணவன்**: தேவி, சென்னைக் காட்சிசாலைச் செப்பேட்டில்

"மீ கொங்கில் காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத்
திருமாலுக்குக் குன்றமன்ன தோர்
கோயிலாக்கியும்"

என்றும், சுந்தரர் கோயில் திருப்பதிகத்தில்

"மீ கொங்கில் அணி காஞ்சிவாய்ப் பேரூரர்
பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே
பெற்றாமன்றே"

என்றும் வந்திருக்கின்றன. இவற்றில் காஞ்சி என்பது தேவியின் பெயர் தாமோ?

**தேவி**: வேறு என்ன இருக்க முடியும்? 8, 9 நூற்றாண்டுகளிலேயே எனக்குக் காஞ்சி என்ற திருநாமத்தை அறிஞர்கள் இட்டு வழங்கினார்கள்.

**மாணவன்**: ஆனால்; சென்னைப் பல்கலைக்கழக வரலாற்று ஆராய்ச்சியாளர் ஒருவர் "காஞ்சிவாய்ப் பேரூர்" இந்தக் கொங்கு நாட்டுப் பேரூராக இருக்க முடியாது என்று ஆங்கிலத்தில் எழுதி இருக்கிறாரே. அதனால் பிறநாட்டு அறிஞர்கள் தவறான கருத்துக்கொள்ள மாட்டார்களா?

**தேவி**: மாணவ! உன் அறிவை மெச்சுகின்றேன். சில அறிஞர்கள் மனம் போன வழியெல்லாம் எழுதுவதுண்டு, உண்மையைக் கடைப்பிடிப்பதே நன்று என்று அவர்கள் அறிவதில்லை.

**மாணவன்**: காஞ்சிவாய்ப் பேரூர் என்றது சிதம்பரம் என்றும் காஞ்சீபுரம் என்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். ஏனெனில் செப்பேட்டின்படி திருமால் கோயில் பேரூரில் இல்லையாம். இங்கு முன் இருந்த கோயில் பிற்காலத்தில் அழிந்த செய்தி அவர்கள் ஆராய்ச்சியில் புகவில்லை போலும். மேலும் கொங்குநாட்டு வாசியும் தென்னாட்டு வரலாற்று ஆசிரியரும் கல்வெட்டறிஞருமான K.V.S. அய்யர் இதனைத் தெளிவுபடுத்தியும் சிலர் மறுப்பது என்ன காரணமோ?

**தேவி**: மாணவ! இந்தத் தருக்கம் நமக்கு வேண்டாம். உண்மை அறிவதே நமது கொள்கையாக இருக்க வேண்டும்.

**மாணவன்**: மாதேவியே! நினது கண்ணோட்டத்தின் எல்லைக்குள்ளேயே யான் நினது அருள் பெற்று கற்று வருவதினால் நினது எழில் பண்புகளை எப்பொழுதும் காண்கின்றேன். இயற்கை வனப்புக்களை நினது புதல்வர்களாகிய உழவர்களுக்கு நீ ஈதலால் அவர்கள் செயற்கைப் பணிகளால் நின் வனப்புக்களை மிகும்படி செய்கிறார்கள். வயல்களில் நெல், கரும்பு, வாழை–தோப்புக்களில் மா, பலா, கொய்யா, தென்னை முதலியவைகளை விளைவித்து நின் இரு மருங்குகளையும் அழகுபடுத்தித் தாங்களும் பிழைக்கிறார்கள். நின் அழகினை இளங்கோவடிகள் பார்த்தால்,

“மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூவாடை அதுபோர்த்து
கருங்கயற்கண் அது ஒல்கி
நடந்தாய் வாழி நற்காஞ்சி’’

என்று மட்டுமா, இன்னும் பெருமையாகப் பாடி இருப்பார் அல்லவா? நினது தோற்றம் எவ்வாறு தொடங்கியதோ அறிய விரும்புகிறேன்.

**தேவி**: தமிழ் மாணவனே! நின் கற்பனையை நான் மெச்சுகின்றேன். நீ ஓதும் கல்லூரியின் மாடியின் மேல் ஏறி மேற்கே கண்ணைச் செலுத்து. என்ன காண்கிறாய்? ஒரு பெரிய வில்லைப் போல மலைத் தொடர் படுத்திருப்பது காண்பாய். அது சிவபெருமானின் வில் ஆகும். அதன் பகுதிகளில் தேவர்கள் வசிக்கிறார்கள்.

ஐயனார், பிள்ளையார், நீலாதேவியார், முருகனார், பொன்னி தேவியார், திருமால் முதலிய அமரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியில் வீற்றிருக்க எம்பெருமான் எல்லாருக்கும் இடையிலே வெள்ளி மலையிலே வீற்றிருக்கின்றார். இவர்களுடைய திருவடித்தீர்த்தங்கள் எல்லாம் ஒழுகி நிலத்தில் படிந்து பெருகி ஒன்றாய்க் கூடி ஆறாகிக் கிழக்கே உங்கள் கல்லூரிக்கருகில் செல்லுகிறதல்லவா? அந்த மலையாகிய வில்லுக்கு ஆறாகிய அம்பு கணையாக அமைந்திருக்கிறது. அந்த அம்புக் கணையே எனது உருவம் என்று அக்காட்சி தோற்றுவிக்கின்றதில்லையா?

**மாணவன்**: அம்மா, தேவி! உண்மை! உண்மை! இந்த இயற்கை அற்புதக்காட்சியை நான் அறியவே இல்லை. இறைவனுடைய பருவத வில்லில் இயற்கையாகப் பூட்டப் பட்டுள்ள பூவால் ஆகிய அம்புதான் நீ என்று என் மந்த மதிக்கு இதுவரையில் தோன்றவில்லையே! அம்மா! இனி இந்தப் புனித உருவத்தை நான் என்றைக்கும் மறவேன்.

**தேவி**: அந்த இயற்கை வில்லில் கட்டப்பட்டுள்ள சலங்கைகளின் விவரங்களைக் காணவில்லையே.

**மாணவன்**: நானே பாக்கியவான். அம்மா! அவை உன் அமுதச் சொற்களால் கேட்க வேண்டும் என்று என் செவிகள் விழைகின்றன.

**தேவி**: மேற்கு மலைத் தொடரின் நடுமையத்தில் இருப்பது இரசிதாசலம் என்னும் வெள்ளியங்கிரி. வடக்கே கயிலையங்கிரி செல்ல இயலாதவர்கள் இக்கிரியிலேயே

ஏழு திட்டுக்களைத் தாண்டி ஆண்டிகளை என்ற சுனையில் குளித்துவிட்டுச் சுவாமி கிரி ஏறி அங்கே இருமருங்கும் சோலை சூழ இடையில் 6000 அடி உச்சியில் இயற்கை முழையில் வீற்றிருக்கும் ஐந்தெழுத்தின் ஒளியாக உருவம் கொண்டிருக்கும் பஞ்சலிங்க மூர்த்தியைத் தரிசித்தும் பிறவிப்பயனைப் பெறலாம். அந்த மூர்த்தியின் திருவடித் தீர்த்தம் ஆண்டிகளை என்ற ஆறாகி 6000 அடிக்குக்கீழ் வந்து' என்னோடு இணைகிறது. அடுத்துத் தெற்கே பொரத்தி மலையில் சிறுவானித் தண்ணீர் ஊற்றெடுத்து முழைக்குள் ஓடி என்னோடு சேருகிறது. ஐங்கரக் கடவுள் கிரியாகிய கரிமலையில் கொடுங்கைப் பள்ளமாக வீழும் அருவி பெரியாறாகவும் சிற்றாறாகவும் இணைந்து சாடிவயலருகே ஓடி என்னுடன் சேருகிறது. அதுபோலவே ஓரத்தி அருவி, ஐயாசாமி அருவி முதலிய சுனைகள் என்னோடு சேருகின்றன.

**மாணவன்**: அருமை, அருமை, இனி என்ன தேவி?

**தேவி**: இனி வடக்கே நீலியம்மன் வாய்க்கால் முட்டத்தருகே என்னோடு சேருகிறது. மருதமலை முருகன் பாத நீர் வடப்பள்ளியருகே மழைக்காலத்தில் ஓடி என்னுடன் சேருகிறது. அனுபாவி மலை, மாங்கரை மலை, பாலமலை, குருடி மலை முதலிய மலையருவிகள் மலைக்கீழ் வீழ்ந்து என்னோடு கலக்கின்றன. இந்த வகையில் மேற்கு மலைச் சிகரங்களில் ஏழு மேகங்களும் அருளுகிற மழைத்துளிகள், தெளிந்த குளிர்ந்த மலர்ந்த நீரைச் செலுத்தி என்னைக் குதூகலிக்கச் செய்கின்றன. இதுதான் என் மலைத் தோற்றம். அம்மலைகளிலே திரியும் கணக்கற்ற விலங்குகள் ஆங்காங்கே விளையாடி

மகிழ்கின்றன. வண்டல்கள் மழை நீரோடு கலந்து என்னைப் பரிமளம் செய்கின்றன. இருளர், மலசர், காடர் முதலிய பண்டைக் குடிகள் என்னைக் கண்டால் தொழுது எனது நீரை அருந்திச் சுவைத்துப் பிழைக்கிறார்கள்.

**மாணவன்**: இந்தப் பண்டைக் குடியில் நின்னுடைய அருள் பெற்று வாழ்ந்தும் யாதொரு பண்பாடும் இல்லாமல் வறுமையிலும் மடமையிலும் வாழ்கிறார்களே அவர்களை நன்னிலைக்குக் கொண்டுவர வழி இல்லையா?

**தேவி**: அவர்களைப் பொருத்தமட்டில் இன்பமாகவே வாழுகிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவர்கள் பண்டைப் பழக்க வழக்கங்களையே விடாமல் கைக் கொண்டு குறிஞ்சி நில மக்களாகவே வாழ்க்கை நடத்துகிறார்கள். எளிய உணவே அவர்களுக்கு ஆறுதல் அளிக்கின்றது. வனங்களில் உண்டாகும் தினை, மா, தேன், கந்தமூலம் இவைகளே போதுமான உணவாகும். அண்மைக்காலம் வரை மரவுரிகளையே கட்டிக்கொண்டு முருகனையே தொழுது கொண்டு வந்தார்கள். அவன் அருளையே நம்பினர். அவர்கள் வாழ்வில் இன்பம் குன்றாதவர்களாகவே இருந்தனர். ஆகவே சமவெளி மக்களைவிட வாழ்க்கையில் நலனே கண்டு வந்தார்கள்.

**மாணவன்**: அப்படி இருந்தவர்கள் இன்று ஏன் தாழ்ந்த நிலையில் இருக்கிறார்கள். காணக் கண் சகிக்கவில்லையே!

**தேவி**: மாணவ! நீ சொல்வது சரியே! சமநிலத்து மக்கள் பிறநாட்டாரின் ஆட்சிக்குள் அடிமைகளாகிப் பொருட்

பேராசையினால் அந்த எளிய மலைவாசிகளின் புனித இடங்களில் புகுந்து அவர்களுடைய உரிமைப் பொருளைக் களவாடி அவர்களுக்கு யாதொன்றும் மீதி வைக்காமல் தவிக்க விட்டிருக்கிறார்கள். அரசியலார் அவர்கள் பிறப்புரிமைகளை எடுத்துக்கொண்டு தற்கால நாகரிகம் தருவதாகக் கூறி மேல்நாட்டு முறையில் சீர்திருத்த நினைக்கிறார்கள். இதனால் அவர்கள் வாழ்க்கை மாறிவிட்டது. கூற்றுவன் முன்னிலைக்கே செல்லுகிறார்கள். நிலைமை யழிந்து பொருளையிழந்து வாழ்வு கெட்டு மடிகிறார்கள். இதுதான் நாகரிகத்தின் பலன்.

**மாணவன்**: அம்மா இந்தச் சீர்கேட்டிற்கு முடிவில்லையோ?

**தேவி**: அது உன்போன்ற மாணவர் திருத்தொண்டில்தான் இருக்கின்றது. அதில் ஈடுபடுவீர்களாக!

---

**காட்சி 3 ] [ அடிவாரம்**

**தேவி**: மாணவ! நீ வெள்ளிமலைக்குச் சென்றிருக்கின்றாய் அல்லவா?

**மாணவன்**: ஆம் தேவி! நானும் என்னுடன் கற்கும் மாணவர்களும் சேர்ந்து ஒருமுறை வெள்ளிமலை இறைவனை வழிபட்டு வந்திருக்கின்றோம்.

**தேவி**: மிகவும் மகிழ்ச்சி. அங்கே எல்லா இயற்கை நலன்களையும் கண்டிருப்பீர்கள் என்றாலும்

அடிவாரத்தின் சிறப்புக்களையும் அனுபவித்தீர்களா?

**மாணவன்**: ஆம் தேவி! அடிவாரம் பூண்டி என்று கூறப்படுகிறது. அங்கே அழகிய குளிர்ந்த சுனைநீர் வழிகிறது. இளவேனில் பருவத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் அங்கே தங்கி மலைஏறி வழிபாடு செய்துவிட்டு வருவார்கள். பொதுவாக வயது வந்த பெண்கள் மலை ஏறுவதில்லை. உறவினர் ஏறி இறங்கினவுடன் அவர்களுக்கு, ஏறாதவர்கள் பாத பூசை செய்து எதிர்கொள்வார்கள். இது மாசி முதல் சித்திரை முழுவதும் நடைபெறும். மழைக்காலம் தோன்றின் இந்தப் பயணங்கள் நின்றுவிடும்.

**தேவி**: அடிவாரத்தில் சில பகுதிகள் மிக்க செழிப்போடு இருப்பதை நீ கண்டாயா?

**மாணவன்**: ஆமாம் தேவி! அடிவாரத்தில் சில கற்கள் வரை நிலத்தை செம்மைப்படுத்தி நன்செய் தோட்டம் தோப்பு காடு இவைகளைத் திருத்தி உள்ளார்கள். அவர்கள் வேளாண்மையிற் சிறந்த வளர்ச்சி பெற்றவர்கள்.

**தேவி**: உழவர்கள் கை தொட்டால் பாலை நிலத்திலும் நீர் சுரக்கும் என்று “தொண்டர் சீர் பரவுவார்” கூற வில்லையா?

**மாணவன்**: ஆமாம் தேவி! வேளாண் பெருமையை கோவலூர் திருக்கோயில் கல்வெட்டும் கூறுகிறதே.

**தேவி**: நீ பல மேற்கோள்களையும் ஓதி இருப்பது கண்டு

மிக மகிழ்ச்சி. அதில் ஒரு பகுதியைக் கூறு பார்ப்போம்.

**மாணவன்**:

"பூமிதேவிக்கு மக்களாகி நிகழ்
செந்தமிழ் வடகலை தெரிந்துணர்ந்து
நீதி கேட்டு நிபுணராகி
நறுமலர் வாடாத் திருமகள் புதல்வர்
எத்திசைக்கும் விளக்காகி
இன்சொல்லால் இனிதளித்து
வன்சொல்லால் மறங்கடித்து
சதுசாகர பரிமண்டலத்து
சந்திராதித்த வரையினிதோங்கி
வாதராசன் காற்றசைப்ப
வருணராசன் நீர் தெளிப்ப
தேவராசன் திசை விளக்க
எத்திசை மகளிரும் இனிது வீற்றிருப்ப
தெங்கும் பலாவும் தேமாஞ் சோலையும்
வாழையும் கமுகும் வளர்கொடி முல்லையும்
பூவையும் கிள்ளையும் பொலிவொடுங் கெழுமி
வாட்டமின்றி கூட்டம் பெருகி
அறம் வளரக் கலிநலிய
புகழ் பெருக பகைதணிய
திசையனைத்தும் செவிடுபடாமல்
செங்கோல் முன்னுகவும்
...... சித்திர மேழிப் பெரிய நாட்டோர்"

**தேவி**: என்ன அருமையான பாட்டு! என்ன அருமை யான கருத்து, இக்காலத்து உழவர்கள் இந்தப் பெருமை யில் இருக்கிறார்களா?

**மாணவன்**: ஆமாம் என்றும் சொல்லலாம். உழைப்பிற் சிறந்த கொங்கு நாட்டு வேளாளரே இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு என்பேன். அவர்கள் தொட்டதெல்லாம் தங்கமாக மாறிவிடுகிறது.

**தேவி**: அவர்கள் கையும் ஏரும் எருதும் பரிச வேதிகள் ஆகும்.

**மாணவன்**: பரிசவேதி என்றால் என்ன அம்மா?

**தேவி**: அது ஒரு மருந்துக் கல். அது தீட்டினால் இரும்பும் பொன்னாம். நிலத்திலிருந்து உழவர்கள் பொன் விளைவிக்கிறார்கள் அல்லவா. கொங்கு நாட்டுப் பிரிவு நாடுகளில் பொன் குலுக்கி நாடு என்ற ஒரு பெயர் உண்டு அல்லவா?

**மாணவன்**: ஆமாம் தேவி. கொங்கு நாட்டுப் பிரிவுகளில் 24 உள்ளன என்பார்கள். அவைகள் எப்போது ஏற்பட்டனவோ?

**தேவி**: எப்போது ஏற்பட்டாலும் என்ன. கொங்கு நாடு தனி நாடாகத் தோன்றியபோதே பிரிவினைகள் ஏற்பட்டுக் குலக்கட்டுப்பாட்டால் நிலை நின்றன எனலாம்.

**மாணவன்**: குலக்கட்டுப்பாடென்றால் என்ன தேவி?

**தேவி**: சமுதாயச் செய்கைகளுக்கு ஊர்க் கட்டுப்பாடு இருப்பதுபோல நாடுகளுக்கும் கட்டுப்பாடு உண்டு. சமுதாயக் கேள்விகளைத் தீர்க்க நாட்டாண்மைக்காரன்,

பட்டக்காரன் என்ற பதவிகள் உண்டு. ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு பட்டக்காரன் இருந்து நாட்டுப் பிரிவினைகளைக் காப்பாற்றிக் குலப் பெருமையைப் போற்றுவான். இவ்விதமாய்ப் போற்றப்பட்ட வழக்கங்களே கொங்கு நாட்டின் பெருமையைக் காப்பாற்றுகின்றன.

**மாணவன்**: மேல் கொங்கில் அமைந்துள்ள நாடு எதுவோ?

**தேவி**: மேல் கொங்கில் உள்ள நாட்டிற்கு ஆறை நாடு என்று பெயர். அதில் ஒரு பகுதியே பேரூர் நாடு. அது தற்போதைய போளுமாம்பட்டிப் பகுதி முழுவதும் கொண்டது. அது பண்டைய சிறப்பு வாய்ந்தது.

**மாணவன்**: தேவி அது எந்த வகையில் சிறப்பு எய்தியதோ?

**தேவி**: மாணவ! வேளாளப் பெருமக்கள் காடு வெட்டி நாடாக்கிச் செம்மேட்டை நன்மேடு ஆக்குவதற்கு முந்தி முட்டம் என்ற இடமே முதலில் குடியேறிய இடமாக இருந்தது. அங்கே நாகேசுவரர் ஆலயம் பண்டைய நாளிலே எனது ஆற்றங்கரையில் ஏற்பட்டிருந்தது. அது தற்போது அழிந்து கிடக்கின்றது. அதன் விக்கிரகங்களும் பேரூர் கோயிலுக்கு வந்துவிட்டன.

**மாணவன்**: இந்த முட்டத்தின் பெருமை யாதோ?

**தேவி**: மாணவ! அதனைக் கேள். இந்த நாகேசுவரசுவாமி கோயிலைச் சுற்றி ஒரு நகரமும் இருந்தது. 12–ஆம்

நூற்றாண்டில் அமரபுஜங்கன் என்ற ஒரு கேரள மன்னன் இந்நாட்டின்மீது படையெடுத்து இந்த ஊரின் பெயரை மாற்றித் தன் பெயரால் சாசனமும் வெட்டு வித்தான். இதற்கு முட்டம் என்ற அமரபுஜங்க சதுர் வேதிமங்கலமென்ற பெயர் தோன்றிற்று. ஆகவே அங்கே சில ஆதி சைவக் குடும்பங்களும் இருந்தன என்றறிவாய்.

**மாணவன்**: தேவி! அத்தனை மதிப்புடன் விளங்கிய கோயிலா தற்போது அழிந்து விட்டது. நமது மக்கள் கடவுள் நம்பிக்கை இழந்து விட்டார்களே.

**தேவி**: மாணவ! அவ்வாறு சொல்லாதே. நாட்டில் வேளாண்மைத் தொழில் சிறந்திருந்த நாள் மட்டும் உடல்நலம், வழிபாடு முதலியவைகள் சரியாக இருந்தன. வேளாண்மையில் அக்கரை குறைந்துவிட்டது. திருத்தின நிலம் திருந்தா நிலமாகி விட்டது. மலைச்சுரம் தோன்றத் தொடங்கிவிட்டது. மக்கள் குடிப் பிரியம் குன்றிவிட்டது. கோயிலும் அழியத் தொடங்கியது. பல நூற்றாண்டுகள் இப்படி இருந்து மீண்டும் ஊக்கம் கொண்ட வேளாண் பெருமக்கள் இங்கே சென்ற நூற்றாண்டில் குடியேறின பிறகே நாடு சீர்பெற்று விளங்குகிறது. இனி பண்டைப் பயனை அடையக் கோயிலை அவர்கள் சீர்திருத்தியமைப்பது அவர்கள் கடமையல்லவா?

**மாணவன்**: ஆமாம் தேவி. பண்பாடு நிறைந்த அந்த வேளாண் பெருமக்கள் இக்கோயிலைச் சீர்திருத்து வார்கள் என்று நம்புகிறேன்.

**மாணவன்**: தாயே! பேரூர் நாடு என்று பெருமையுடன் போற்றுகிறோமே இதன் பண்டைய வரலாற்றையறிய எனக்கு விருப்பம்.

**தேவி**: எனது அருமை மாணவ, அப்படி கேள். அந்த வரலாற்றை அறிந்த பிறகு அல்லவோ ஏனைய வரலாறுகளையறிய வேண்டும். பேரூரின் பெயர்களைப் புராணம் மட்டுமேயல்லாமல் நாயன்மார்களும் கல்வெட்டுக்களும் குறித்திருப்பதை முன்னமே நீ அறிவாய் அல்லவா?

**மாணவன்**: ஆம் தேவி, அப்பர் ‘பேரூர் பிரமபுரம்‘ என்றும், ‘பேரூர் அழுந்தூர் உள்ளார்’ (வீழிமிழலை) என்றும், சுந்தரர் ‘பேரூர் உறைவாய் பட்டிப்பெருமான் பிறவா நெறியானே” என்றும் (ஊர்த்தொகை) குடகத்தில்லையம்பலம், என்றும் ஆன்பட்டி நச்சாவார்த்தபட்டி என்றும் கூறியமையின் பேரூரானது பிரமபுரம், பட்டியூர், குடகத் தில்லையம்பலம், ஆன்பட்டி, பிறவாநெறி என்ற பெயர்கள் இருந்தன என்று அறிவோம். கல்வெட்டுக்கள் காஞ்சிவாய்ப் பேரூர், திருவான்பட்டியுடையார் என்றும், புராணங்கள் அரசம்பலம் (பிப்பிலாரணியம்) பிறவா நெறி (புராணம்) பட்டி (புராணம்) முதலிய பெயர்களையும் கூறுவதனால் இவைகளை அறிவாம்.

**தேவி**: மாணவ, இனி பண்டைப் பெருமை அறிவதற்கு

ஆற்றங்கரையில் உள்ள பாண்டவர்கள் குழிகள், முதுமக்கட்டாழிகள் உரோமானிய நாணயப் புதையல்கள் இவைகள் கிடைத்திருக்கின்றன அல்லவா?

**மாணவன்**: ஆம் தேவி! படித்திருக்கிறேன். இவைகள் எவைகளை நிரூபிக்கின்றன?

**தேவி**: மனிதன் நாகரீகம் அடையாத காலத்தில் தன் சவங்களைப் பல வகைகளில் அப்புறப்படுத்தினான். அப்போதே அவனுக்குப் பின் பிறவி உண்டு என நம்பிக்கை இருந்தது. அவ்வாறு அப்புறப்படுத்திய வகையில் மாண்டவர் குழிகளும், முதுமக்கட்டாழிகளும் இறந்தவர் சவங்களை அவர்களுடைய பொருள்களுடன் பத்திரப்படுத்திவைத்த சின்னங்கள் அவையாகும். மணிமேகலையில் இதற்குச் சான்றுகள் இருக்கின்றன.

**மாணவன்** : ஆம் தேவி! "சுடுவோர் இடுவோர் தொடுகுழி படுப்போர் தாழ்வயின் அடைப்போர், தாழியில் கவிப் போர்" என்பதிதனைப் பற்றித்தானா?

**தேவி**: ஆம் மாணவ! அவ்வாறு சேமித்து வைத்திருந்த பண்டைச் சின்னங்கள் பேரூருக்கு வடக்கே உழவர்கள் நிலத்தை உழுத காலங்களில் இவ்விடுகுழிகள் பலவும் பலவகைகளாக ஆக்கப்பட்டன. அச்சின்னங்களே பண்டைய நிலையை எடுத்துக் காட்டுகின்றன. சிலவற்றை காட்சிச் சாலைகளில் காணலாம்.

**மாணவன்**: தேவி, உரோமானிய நாணயங்கள் இங்கு எப்படி வந்தன?

**தேவி**: மாணவ! உரோமானியர் கிறிஸ்து சகாப்தத்திற்கு முந்தியே புகழ்பெற்ற சிறப்போடு விளங்கிக் கீழ் நாடுகளில் வாணிபம் செய்து திரைகடலோடித் திரவியம் தேடினார்கள். அவர்கள் இங்கிருந்து மயிற் பீலி, மிளகு, இலவங்கம் முதலிய பொருள்களை வாங்க வந்தபோது விலையாகக் கொடுத்த வெள்ளி நாணயங்கள் இங்கேயே புதைபட்டுப் போயின. நூற்றுக் கணக்கான நாணயங்கள் பேரூர் நாட்டில் கிடைத்தன. அவைகள் சீசர் முதலாக நீரோ வரையில் பேரூர் நாட்டில் இருந்தன. அஃதாவது 20 நூற்றாண்டுகளுக்கு முன்பே அவைகள் புத்தம் புதியதாகக் கிடைத்தமையின் அக் காலத்திலேயே புதைக்கப்பட்டிருக்கலாம்.

**மாணவன்**: பேரூர் நாடு 20 நூற்றாண்டுகளுக்கு முன்பே சிறந்திருக்க வேண்டும் அல்லவா?

**தேவி**: இதற்கென்ன ஐயம். அதற்கு வெகு ஆண்டுகளுக்கு முன்பே இந்நாடு ஒரு பெரிய வனமாக இருந்தது. அதில் இருளர் வசித்து வந்தார்கள். அவர்கள் ஒரு சிவலிங்கத்தையும் ஊர்த் தேவதையையும் போற்றி வந்தார்கள். ஒருநாள் ஒரு இடையன் மாடு மேய்க்கையில் ஒரு பசு புதர் ஒன்றில் தானாகவே பால் சுரந்து கொண்டு நிற்க அதனை அடித்தான். அப்பசு மிரண்டு துள்ளிச் செல்ல அதன் குளம்பு ஒரு கல்லின்மீது பட அங்கே குருதி தோன்றிற்று. அவ்விடையன் அதனைச் சிற்றூராருக்குச் சொல்ல அங்கே சோதித்துப் பார்த்த பொழுது ஒரு காயப்பட்ட லிங்கம் இருந்தது. அது தான் பட்டிலிங்கம் அல்லது சாசனச் சொல்படி திரு ஆன் பட்டியுடையார் என்ற மூர்த்தியாகும்.

**மாணவன்**: அம்மாதேவி. காமதேனுவின் கன்று துள்ளினதாகக் கூறுகிறார்களே அது என்ன?

**தேவி**: அது புராணக் கதை. அதைக் கொடிக் கம்பத்திலும் தேர்ச் சித்திரத்திலும் தீட்டி இருக்கக் காணலாம். சோழன் பூர்வபட்டயம் என்ற ஏட்டுப் பிரதியில் யான் கூறின வரலாறு எழுதப்பட்டுள்ளது. இவை கர்ண பரம்பரைகள் என்று அறியவும்.

**மாணவன்**: பிற இடங்களில் இவை உண்டல்லவா?

**தேவி**: ஆம். தொண்டை நாட்டில் மாடம்பாக்கத்திலும் இதே கதை வழங்குகிறது.

**மாணவன்**: ஊர்த் தேவதை எவ்வாறு வெளிப்பட்டாளோ?

**தேவி**: இது சோழன் பூர்வபட்டயத்தில் கூறப்பட்டுள்ளது. இந்த இடம் பண்டைக் காலத்தில் ஒரு அரசமரக் காடாகவும், அதில் ஒரு இருளர் பதியும், அதில் அதிமூர்க்கம்மன் என்ற அவர்கள் குலதேவதையும் இருந்தன. கிழக்கே இருந்து வந்த கரிகாற்சோழன் அந்தக் காட்டை அழித்து நாடாக்கத்தொடங்கும் பொழுது அத்தேவதை பலி கேட்க இரண்டு பாலர்கள் பலி கொடுக்கப்பட்டார்களாம். இதற்குச் சான்று கோயில் மேலைக் கோபுர வாயிலில் உள்ள ‘தலை வாங்கினான்’ சிலையாகும். பலி கொடுத்த பிறகு அத்தேவதை திருப்தி அடையப் பேட்டையும், கோட்டையும், கோயிலும், குளமும் கட்டப்பட்டனவாம். இதுவே கர்ண பரம்பரைக் கதை ஆகும். இதனை ஒட்டியே பெருந்திருவிழாவில்

முதலில் அதிமூர்க்கம்மனுக்கே பூசை நடக்கிறதாம்.

**மாணவன்**: பேரூர்க் கோயிலின் பெயர் வந்த காரணத்தைக் கூற வேண்டுகிறேன்.

**தேவி**: பேரையன் என்ற இருளன் பெயரால் பேரையூர் என்ற பெயர் வந்ததாகப் பட்டயம் கூறுகிறது.

**மாணவன்**: வேறு காரணமும் உண்டோ, அம்மா?

**தேவி**: ஆம். பேரூர் என்றால் பெரிய ஊர் என்று பொருள். அந்நாளில் இதுவே நாட்டின் பெரிய ஊராக இருந்திருக்கலாம்.

**மாணவன்**: "ஆதியிலே எங்கள் ஊர் கருவூராம், அந்தத்தில் போயடைவோம் பேரூர் தன்னில்" என்ற அடிகள் இதனை வற்புறுத்தியுள்ளனவோ?

**தேவி**: இருக்கலாம். பேரூருக்கு முத்தித்தலம் என்ற ஒரு புகழ்ப் பெயர் இருக்கிறதல்லவா?

**மாணவன்**: ஊர் உண்டான காலம் எதுவோ.

**தேவி**: பண்டைய ஊர் என்று மட்டும் கூறலாம். இது சமயாசிரியர்களால் கூறப்பட்டுள்ளதால் அவர்கள் காலத்திலேயே புகழ் பெற்றிருக்க வேண்டும். அதாவது 3, 4 நூற்றாண்டு அளவிலே மூர்த்தி தோன்றி இருக்கலாம். இது வைப்புத்தலம் அல்லவா?

**மாணவன்**: ஏனோ பாடல் பெறவில்லை?

**தேவி**: பாடல்கள் எல்லாம் நாளதுவரை கிடைத்திருக் கின்றனவா? எத்தனை மறைந்து போயினவோ. அழிவும், மாறுதலும் இயற்கையல்லவா?

**மாணவன்**: மிக்க நன்றி, என்னென்ன தெரிந்து கொள்கின்றேன். விந்தை!

---

**காட்சி 5 ]** **[ அப்பர் – சுந்தரர்**

**மாணவன்**: பண்டைக் காலத்தில் கொங்கர் கோசர் என்ற தலைவர்கள் இருந்தனரென்று சங்க நூல்கள் கூறுகின்றனவே அவர்கள் பேரூரில் தொடர்பு கொண்டிருந்தார்களோ என்பது எனக்கு ஐயம்.

**தேவி**: கொங்கர் இந்நாட்டு மக்கள். அவர்கள் பெயரே நாட்டிற்காயிற்று. அவர்கள் வட கொங்கு தென் கொங்கு என இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து நாட்டையாண்டார்கள். அவர்கள் வேளிர் தலைவர்கள். வடகொங்கில் அதியமான்கள் ஆண்டு வந்தனர். அவர்களது தலைநகர் தகடூர் என்ற தருமபுரி. தென் கொங்கில் ஆய், குமணன் முதலிய வேளிர்கள் ஆண்டார்கள். அவர்கள் ஆய்க்குடி, கொழுமம் முதலிய இடங்களில் இருந்து ஆண்டனர். இவர்கள் நாளில் பேரூர்க் கோயில் புகழ் பெற்றிருக்கவில்லை. ஆகையால், அவர்களின் தொடர்பு இங்கே காணப்படவில்லை.

**மாணவன்**: வேறு காரணமும் கூறலாமோ?

**தேவி**: கூறலாம். வேளிர்களோ நாட்டு ஆட்சி, போர்புரிதல் இவைகளிலேயே வாழ்க்கையைச் செலுத்தினார்கள். இறை வணக்கமாகிய சமயச் சார்பில் திகழவில்லை. ஆகவே பேரூரின் அண்மையிலேயே அவர்கள் வர முயலவில்லை.

**மாணவன்**: இனிக் கோசர் தொடர்பும் இல்லையோ?

**தேவி**: கோசர் ஒரு மறவினைக்குலத்தார். அண்மை ஆராய்ச்சியின்படி பிற நாட்டிலிருந்து அவர்கள் போர் புரிய வந்தவர்கள். நாலூர்க்கோசர், வம்பக்கோசர் முதலிய சொற்கள் அவர்களைக் கொங்குநாட்டு மக்களாக ஆக்கவில்லை.

**மாணவன்**: கொங்கிளங் கோசர் யாரோ?

**தேவி**: அந்த வகையில் சேர்ந்த ஒரு தலைவன், இளங்கோசன். அவன் சிலப்பதிகாரத்தில் கொங்கு நாட்டில் இருந்தனன். அவன் பத்தினிக் கடவுளுக்கு படிமம் எழுப்பினவன். அவனுக்கும் பேரூருக்கும் தொடர்பு இல்லை. இங்கே கண்ணகி கோயிலும் இல்லை.

**மாணவன்**: கோசர் ஆண்டதினால் கோயமுத்தூர் ஆயிற்றென்று கூறுவது சரியா?

**தேவி**: அக்கூற்று பெருந் தவறாகும். கோயமுத்தூர் 8-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றியது. அது பேரூருக்குச்

சேர்ந்த ஒரு பதாகை. (சிற்றூர்) பேரூர் நாட்டுக் கோவன் புத்தூர் என்பது கல்வெட்டு. கோவன் என்ற இருளன் பெயரால் இது ஏற்பட்டது.

**மாணவன்**: கங்கர் 7, 8-ஆம் நுற்றாண்டுகள் வரை ஆண்டார்களே. அவர்கள் பேரூரை ஆளவில்லையோ?

**தேவி**: இல்லை. அவர்கள் காவிரிக்கு வடபால் தலைக் காட்டிலேயே இருந்தார்கள். அவர்கள் எண்ணம் வட கொங்கில் தகடூர் பக்கம் சென்றது. மீ கொங்கிற்கு அவர்கள் வரவே இல்லை. கொங்கு மன்னர்களே இதனை ஆண்டு வந்தார்கள்.

**மாணவன்**: சமயாசிரியர்கள் வரும் மட்டும் ஆட்சி விசேடங்கள் இங்கே இல்லைபோலும்.

**தேவி**: விந்தை, மாணவ! சமயாசாரியர்களில் அப்பர் 6-ஆம் நூற்றாண்டிலும் சுந்தரர் 8-ஆம் நூற்றாண்டிலும் வந்தார்கள். அவர்கள் திருவடி தோய்ந்ததினாலும் பாடலில் கூறப்பட்டதாலும் பேரூரின் பெருமை பெருகிற்று. இவ்வூர் சிறந்த வைப்புத்தலமாகி அவிநாசி முதலிய பாடல் பெற்ற தலங்களுக்குச் சமானமாக மக்களால் போற்றப்பட்டது.

**மாணவன்**: அப்பர் பெருமான், பேரூருக்கு வரவில்லை என்கிறார்களே.

**தேவி**: மாணவ! அப்பர் வரலாறு கூறும் சேக்கிழார் நாயனார் அச்செய்தி கூறவில்லை. காவிரிக் கரையில்

கொடுமுடி மட்டும் வந்து பிறகு திரும்பி விட்டதாகத்தான் கூறுகிறார்.

**மாணவன்**: சுந்தரரோ பேரூர் வந்ததன்றி இங்கே கூத்தப் பெருமான் திருவுருவத்தை வியந்து பின்னால் சிதம்பரத்தில் அதனை நினைவு படுத்தியிருக்கின்றார். அதனைச் சிறப்பாகச் சேக்கிழாரும் இந்நாட்டுத் தலபுராணங்களும் கூறுகின்றன.

**தேவி**: சுந்தரருடைய திருப்பாடலைச் சொல்லு; கேட்கலாம்.

**மாணவன்**:

பாரூரும் அரவல்குல் உமை நங்கையவள்
பங்கன் பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர் செக்கில்
இடும்போது தடுத்தாட்கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீ கொங்கில்
அணி காஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்
சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே

**தேவி**: மிக இனிமை. என்ன கருத்தோவியம்!

**மாணவன்**: ஆனால் இங்கே நடக்கும் திருவிளையாடலைச் சேக்கிழார் குறிக்கவில்லையே. ஏன்? அம்மா!

**தேவி**: சேக்கிழார் கொங்கு நாட்டிற்கு வந்திருக்க மாட்டார். இங்கு நடந்த செய்திகளை முற்றும் குறிக்க

வேண்டிய தேவையுமில்லை என்றுதான் கூற வேண்டும்.

**மாணவன்**: இந்த அற்புதம் நடந்திருக்குமா?

**தேவி**: ஏன் ஐயம்? பல சான்றுகள் இருக்கின்றன. திருவிளையாடல் சிற்பம், ஆண்டு தோறும் நடைபெறும் விழா, புராணக்கூற்று, பட்டிப்பெருமான் உழவர் நாயகன் என்ற பொருத்தம், முகம் சேதித்திருக்கும் இடபம் - இவை எல்லாம் போதாதா?

**மாணவன்**: அந்தச் செய்திகள் நடைபெற வேண்டிய தேவை என்னவோ?

**தேவி**: நன்றாக நினைத்துப்பார். கச்சியப்பர் என்ன காரணம் கூறுகிறார்.

**மாணவன்**: ஆமாம். அம்முனிவர் அருளிய பேரூர்ப் புராணப் பள்ளுப் படலத்தில் ஒரு பாடல் உண்டு.

“உயர்ந்ததுவும் தாமே இழிந்ததுவும் தாமே என
மறை ஓலமிட் டுரைக்கும்
வியந்த தம் செய்கை இரண்டனுள் ஒன்று
வேதியனாகி முன்காட்டிப்
பயந்தரும் இறைவர் மற்றதும் காட்டப்
பள்ளனாய்த் திருவிளையாட்டால்
நயந்த பூம்பணையின் வினையே அன்பர்
நண்ணுமுன் நண்ணின ரம்மா”

**தேவி**: நன்கு உரைத்தாய் மகனே. அதே காரணம் என்று அறிக. அதன்படிப்பினை ஆராய்ந்துணர்க.

**மாணவன்**: இறைவனுடைய திருவருட் குணங்களை எவரே அறியவல்லார்? உலகில் உள்ள எல்லா உயிர் கட்கும் அவரே தாயும் தந்தையும் ஆவார். உயர்ந்ததுவும் இழிந்ததுவும் மக்களுடைய கற்பனைகளே. அவ்வேறுபாடு தனக்கு இல்லை என்றும் எறும்பு முதல் தேவதைகள் ஈறாக உள்ள எல்லா உயிரினங்களுக்கும் தானே அப்பன் என்று காட்டவல்லவோ அந்தத் திருவிளையாடல் இயற்றினான் என்று அச்செய்யுள் கூறுகிறது.

**தேவி**: ஆமாம். நன்கு கூறினை ! திருநாவலூரில் வேதிய முதியோனாய் வந்து தடுத்தாட் கொண்ட அவனே பேரூரில் பள்ளனாக வந்து மீண்டும் ஆண்டான். இது உலகிற்கு ஒரு ஒப்புயர்வற்ற படிப்பினை அல்லவா?

---

## காட்சி 6 ] [ பாண்டியன் படையெடுப்பு

**மாணவன்**: தேவியே! மதுரைப் பாண்டியன் பேரூருக்கு வந்தான் என்று முன்னமே கூறினாயே. அவன் நின் பெயரை விளம்பரப்படுத்தும் செயலைக் கொண்டிருந் தான் என்று கேள்விப்பட்டேன். அவன் செயலைச் சிறிது விளக்குங்கள்.

**தேவி**: மாணவ! மதுரையில் பாண்டியர் குடிதமிழை வளர்த்தினதை அறிவாய். சங்க காலத்துப் பாண்டியன் சென்றபிறகு மதுரையில் சிறிது காலம் களப்பிரர் அதனை வென்று ஆண்டனர். பிறகு மீண்டும் பாண்டியர் கிளை

தலைநிமிர்ந்து அவர்களிலே சடையன் இரணதீரன் (கி.பி.680 - 710) கொங்கு நாட்டின் மீது படையெடுத்துக் கொங்கர் கோமான் என்ற விருதும் பெற்றான். அவன் மகன் அரிகேசரி (710 - 740) பாண்டி நாட்டில் கொடுமுடி வரை வந்தான். அவன் மகன் நெடுஞ்செழியன் (760-770) கொங்கு மன்னன் அதிகமானைப் பல இடங்களில் தோற்கடித்தான். அவனே 'மேல் கொங்கில் காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத் திருமாலுக்குக் குன்றமன்னதோர் கோயில்' கட்டினான்.

**மாணவன்**: அந்தப் பெருங்கோயில் என்னவாயிற்றோ?

**தேவி**: பிற்காலத்தில் கொங்கு நாட்டில் வந்த திருக்கணாம்பி சங்கரையன் மகன் மாதையன் அக்கோயில் கற்களைக் கொண்டு பேரூர் தெப்பக்குளத்தைக் கட்டித் தன் பெயரால் மாதேச்சுரம் என்ற சிறு கோயிலையும் எழுப்பினானாம்.

**மாணவன்**: இதற்கு என்ன ஆதாரமோ?

**தேவி**: இதோ பார். அந்தத் தெப்பக் குளத்தில் 16 மூலைகளில் கல்வெட்டுக்கள் தமிழிலும், கன்னடத்திலும் பொறித்திருப்பதைப் பார்ப்பாய்.

**மாணவன்**: அவனுக்கு என்ன அத்தனை மாச்சரியமோ?

**தேவி**: அவன் வீர சைவன் அல்லவா?

**மாணவன்**: பாண்டியரைப் போல, சேரர்களும் புகுந்து

பார்க்கும் மட்டும் கொங்குநாடு மதி கெட்டிருந்ததா?

**தேவி**: 'வல்லவன் இட்டதே வாய்க்கால்' என்பதை மறந்தாயோ? 8,9 நூற்றாண்டுகளில் சேரர்கள் கணவாயைத் தாண்டி பேரூர் நாடு புக்கனர். கோக்கண்டன், இரவி கோதை, வீரநாராயணன் என்போர் வெள்ளலூர், பேரூர் முதலியவைகளைப் பிடித்துப் பழனி வரை சென்றார்கள். கோவையின் பெயரை மாற்றி வீரகேரள நல்லூர் என்று பெயரிட்டார்கள்.

**மாணவன்**: அப்பெயர் இப்பொழுது இல்லையே.

**தேவி**: சூரையாட வந்தவர் பெயர் நிலைநிற்குமா? அப் போதே தொலைந்தது. ஆனால், அருகிலே ஒக்கிலி பாளையத்தின் மறுபெயர் வீரகேரளம் என்று இருப்பதில் கேரளர் செய்தி கிடைக்கிறது.

**மாணவன்**: பாண்டியர்களும் கேரளர்களும் கொங்கு நாட்டின் மீது படையெடுத்து வந்ததற்கு யாது காரணம்?

**தேவி**: பாண்டிய நாட்டில் வையைப் பள்ளத்தாக்கைத் தவிர மற்றைய பகுதிகள் செழிப்பானவைகள் அல்ல. ஆகவே அவர்கள் செழிப்பான நிலங்களைப் பிடித்துப் பொருள்களை வவ்விக் கொண்டு போக வந்திருக்கலாம். அதுபோலவே கேரளர்களும் வந்திருக்கலாம்.

**மாணவன்**: ஏன் அப்படிச் சொல்கின்றாய், தேவி?

**தேவி**: பாண்டிய நாட்டில் வைகைப் பள்ளத்தாக்கை விட்டு வடக்கே சென்றால் திண்டுக்கல் பகுதி செழிப்பில்லாத

நாடாக இருக்கிறது. அந்தப் பிரதேசத்தில் தஞ்சை வட்டத்தைப் போலக் கோயில்கள் இல்லாமையே அந்தப்படி செழிப்பின்மைக்குக் காரணம் என்று கூற வேண்டும்.

**மாணவன்**: தேவி! அப்பாண்டி நாட்டில் கோயில்கள் மிகக் குறைவோ.

**தேவி**: ஆமாம் புதல்வ! சோழ நாட்டில் பாடல் தலங்கள் 260-க்குமேல் இருக்க பாண்டி நாட்டில் 14 தான் உள்ளன அன்றோ. அவைகளும் வைகைக்கு வடக்கே இல்லையல்லவா?

**மாணவன்**: ஆம் தேவி. ஆகவே, செழிப்பைக் கண்டு அவர்கள் நாடு கவர்ந்தார்களோ?

**தேவி**: அதற்கு என்ன ஐயம்? அமராவதி ஆறும், நொய்யல் ஆறும் பாய்கின்ற நாடு மிகச் செழிப்பானது அல்லவா? அச்செழிப்பே பாண்டியரையும் கேரளரையும் இழுத்திருக்கலாம்.

**மாணவன்**: பிறகு ஏன் திரும்பி விட்டனர்?

**தேவி**: பொருளாசையுற்றவர்கள் பொருள் கிடைத்தால் திரும்பவேண்டியதுதானே. நாட்டை ஆண்டு மக்களுக்கு நன்மை தரும் நற்குணம் அவர்களிடம் இருந்திருக்காது என்று உணர்க.

**மாணவன்**: அம்மா தேவி! கொங்கு நாட்டிற்குத் தன்னுரிமை என்பதே கிடைத்திலதோ

**தேவி**: ஏன் அப்படிச் சொல்லுகின்றாய். மாணவா! 10-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நல்ல காலம் ஏற்பட்டது. கிழக்கே சோழ மண்டலத்திலே சோழ சாம்ராஜ்யம் என்ற தமிழ்ச் சோதி தோன்றிற்று. விஜயாலயச் சோழ வம்சம் தமிழ்ப் பண்பாட்டை உலகம் முழுவதற்கும் தெரிவிக்க வந்தது. திரைகடலோடியும் அதனைச் செலுத்திற்று. அப்போதுதான் கொங்கு நாட்டிற்கும் சுதந்திர வாஞ்சை ஏற்பட்டது. பிறநாட்டார்களில் கங்கர்களை இராஜேந்திரன் வென்று கி.பி. 894-இல் தலைக்காட்டைப் பிடித்தான். கொங்குநாடு அவன்வசம் சென்றது. அவர்களின் பிரதிநிதிகளாக வந்த இளவரசர்கள் கொங்குச் சோழர் என்ற பெயரில் தனியரசினர் ஆனார்கள். பிறகு மூன்று நூற்றாண்டுகள் வரை கொங்குநாடு தனி நாடாக இருந்தது.

**மாணவன்**: அப்படி அரசாண்ட அரசர்கள் யாரோ?

**தேவி**: அப்படிப்பட்ட புகழ்பெற்ற அரசர்களில் விக்கிரமன் (1004-1045); குலோத்துங்கன் (1143-1183); வீர சோழன் (1183-1206); வீர ராஜேந்திரன் (1207-1252) முதலியோர் அரசாண்டனர். இவர்கள் கோநேரின்மை கொண்டான், இருகொங்கும் ஆண்டவர்கள் என்ற பிரிதுக்களை வகித்துக் கொண்டார்கள்.

**மாணவன்**: அந்தப் பெயர்களுக்குப் பொருள் யாது தேவி! கூறியருள வேண்டும்.

**தேவி**: இப்பட்டங்கள் அவர்கள் புகழ்ச் செய்திகளை வெளியிடுகின்றன. கோனேரின்மை கொண்டான் என்றால் தனக்கு நிகரில்லாதவன் என்று பொருள், இரு கொங்கும் ஆண்டான். என்றால் தென் கொங்கு, வடகொங்கு இரண்டையும் ஒரு குடைக் கீழ் கொண்டுவந்து ஆண்ட மன்னன் என்று பொருள்.

**மாணவன்**: இந்த அரசர்கள் பேரூருக்கு என்ன செய்தார்களோ? அது எப்படித் தெரியும்?

**தேவி**: மாணவ! நன்கு பார். பேரூர் கோயிலிலே கர்ப்பக் கிருகத்தின் முப்புறங்களிலும் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகளைக் கண்டிருக்கின்றாயா?

**மாணவன்**: ஆமாம். பார்த்திருக்கின்றேன் தேவி!

**தேவி**: அவைகள் பெரும்பாலும் கொங்குச் சோழ மன்னர்களால் பொறிக்கப்பட்டவை. அவைகளில் ஆட்சி முறைகள், நீர் வசதிகள், வரி வகைகள், அரசனுடைய வீரச் செயல்கள், கோயில்களுக்குத் தான தருமங்கள் முதலியவைகளெல்லாம் கண்டிருக்கின்றன.

**மாணவன்**: நாட்டினுடைய நிலைமையையும் அறிவிக்கின்றனவா?

**தேவி**: அதிலென்ன ஐயப்பாடு. நாட்டு நாணயங்கள்

பண்ட மாற்று, வட்டி விகிதம், அளவைகள், சேனைப் பெயர்கள், அரச சேவைக்கு உதவிய உரிமைகள் முதலிய விவரங்கள் எழுதப்பட்டுள்ளன. தற்கால வரலாற்று ஆராய்ச்சிக்கு என்னென்ன வேண்டுமோ அவைகள் எல்லாம் அவைகளில் நன்கு உண்டு.

**மாணவன்**: இந்த வகையில் நாடு முன்னேற்றம் அடைந்திருக்கலாம் அல்லவா?

**தேவி**: ஆமாம் மாணவ! அரசியல், நாணய மாற்றம், வாணிபம், பாசனத் திட்டம், நில வருமானம், விளைவு, கைத் தொழில் இவைகளுக்குச் சலுகை, குடியேற்றம், சமூக வாழ்வு ஆகிய மேற்பார்வை, சமய முன்னேற்றம் கல்விகேள்வி, நூற்பெருக்கம் முதலிய எல்லா வழிகளிலும் நாடு முன்னேற்றம் அடைந்தது.

**மாணவன்**: அப்படி உயர்ந்த பண்பாடு கொண்ட கொங்குச் சோழர்களின் வரலாறு எவரும் எழுதி வைக்கவில்லையே!

**தேவி**: ஏன் இல்லை. அழியாத கோயில் சுவர்களிலே எழுதி இருக்கிறார்களே.

**மாணவன்**: அவைகளைப் படிக்க முடியாமல் இருக்கிறதே.

**தேவி**: அதனால்தான் அவை அழியாமல் இருக்கின்றன. இல்லாவிடில் பகைவர்கள் அழித்திருப்பார்கள் அல்லவா. ஏட்டுப் பிரதிகள் இல்லை என்கிறாயா? அவைகள் எளிதில் அழியும்; ஆனால் கல் வெட்டு அழியாது.

**மாணவன்**: இலக்கியங்கள் இல்லையே!

**தேவி**: இலக்கியங்கள் ஏடுகள் அல்லவா? எத்தனையோ ஏடுகள் தீக்கும் கறையானுக்கும் இலக்காகி விட்டன.

**மாணவன்**: பாவம்! புலமைக்கு இச் சீர் கேடா.

**தேவி**: ஆம்! என்ன செய்வது? மக்களுக்குப் புலமையில் ஆழ்ந்த அன்பு இல்லை. புலவர்கள் என்றால் தாழ்ச்சியில் வைத்திருந்தார்கள். தகுந்த போற்றுதல் இல்லை. கொங்குச் சோழர்களுடைய பெருமைகளை எழுதி வைக்கப் புலவர்களுக்குப் போதுமான ஆதரவு தரவில்லை போலும். என்றாலும், அக்காலத்தில், கொங்குச் சோழர்கள் நாட்டிற்கு மிகுந்த நன்மை செய்தார்கள் என்பதற்கு வாய்க்கால், குளம், அணை, கோயில், கோட்டை முதலிய பொதுச் செயல்கள் எத்தனையோ ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைப் பற்றிய நூல்கள் தற்போது கிட்டாமற் போன போதிலும் வழங்கி வரும் பெயர்களைக் கொண்டு நாம் ஒருவாறு அறியலாம்.

**மாணவன்**: பெயர்கள் மட்டும் இருந்தால் வரலாற்றையறிய முடியுமா?

**தேவி**: இடப் பெயர்களின் ஆராய்ச்சி நமது நாட்டில் மிகக் குறைவு. ஆங்கில நாட்டில் இடப் பெயர்களை வைத்துக் கொண்டே பெரிய நூல்களை எழுதிவிடுகின்றனர். சில எடுத்துக் காட்டுகள் கூறுகின்றேன். இராஜராஜ வாய்க்கால், நஞ்சராயன் குளம், குலோத்துங்கச் சோழீச்சுரம்,

முதலிய பெயர்கள் எவற்றைச் சுட்டுகின்றன? கல்லூரி மாணவர்களாகிய நீங்கள் இப்படிப்பட்ட ஆராய்ச்சியில் இறங்க வேண்டும்.

---

**காட்சி 8 ] [ தெற்கும் -வடக்கும்**

**மாணவன்**: தேவி! கொங்குச் சோழர்கள் மூன்று நூற்றாண்டுகள் மட்டும் ஆண்டனர் என்றாயே. பின்னால் எப்படி நாடு இருந்தது?

**தேவி**: மாணவ! எந்தத் தனி மனிதக் குடும்பமும் மூன்று தலைமுறைதான் சிறப்புற்று இருக்கும். எந்த அரசியலும் 3 நூற்றாண்டுகள் தான் புகழ் பெற்றிருக்கும். மக்களுடைய ஊழ்வினை அப்படித்தான் இருக்கிறது. அது பின்பற்றி கொங்குச் சோழரும் தஞ்சைச் சோழரும் தம் சிறப்பை இழந்தார்கள்.

**மாணவன்**: பின்னர் யார் வந்தனர்?

**தேவி**: அதைச் சொல்வதற்கே பரிதாபமாய் இருக்கின்றது. தெற்கேயிருந்து பாண்டியரும் வடக்கேயிருந்து கன்னடிய ஹொய்சளரும் நாட்டைப் பகிர்ந்து கொண்டார்கள். நாடு மீண்டும் வடக்கு - தெற்கு ஆகிவிட்டது.

**மாணவன்**: அவர்களும் நிலையாக இருக்கவில்லையே.

**தேவி**: உண்மை. தஞ்சைச் சோழரைப் பாண்டியர் வெல்ல கொங்கு நாடும் அவர்கள் கைக்குச் சென்றது. வீர

பாண்டியர் சுந்தரபாண்டியரென்ற கொங்குச் சோழர்கள் ஆண்டனர். அவர்களும் சோழர்களைப் போல் செவ்வையாகவே செங்கோல் நடாத்தினர்.

**மாணவன்**: வடபகுதி எப்படி ஆயிற்றோ?

**தேவி**: ஹொய்சள வம்சத்தார் வெகு தீரத்தோடு சுற்று நாடுகளைப் பிடிக்கவே கொங்குநாடும் அவர்கள் கையில் புகுந்தது. அப்போது எல்லாம் பேரூர்க் கோயிலும் அவர்கள் ஆட்சியில் இருந்தது. பாண்டியர், ஹொய்சளர் கல்வெட்டுக்கள் பேரூரில் இருக்கின்றன.

**மாணவன்**: பிற நாட்டார் ஆட்சிகளில் கொங்கு நாடு மிகவும் எளிமையடைந்திருக்குமே!

**தேவி**: ஆமாம். 13-ஆம் நூற்றாண்டு முழுதும் தென்கொங்கு பாண்டியரிடமும் வடகொங்கு ஹொய்சளரிடமிருந்தும் தலை குனிந்திருந்தன. இவ்விரு பகுதிகளுக்கும் இடையே என் பெயர் எல்லை கோலிக் கொண்டிருந்தது.

**மாணவன்**: அப்படியானால் எல்லைப் பகுதியில் வாழ்ந்த மக்கள் மிகவும் அவதிப்பட்டிருப்பார்களே.

**தேவி**: உண்மை. இந்தப் பேரூரும் அதன் கோயிலும் ஒரு நாள் பாண்டியர் வசமும் மறுநாள் ஹொய்சளர் வசமும் கைமாறினால் எவ்விதமாக அமைதியுறும்? அவரவர்கள் பெருமைகளைக் கோயில் சுவர்களில் தீட்டி வைப்பார்கள். ஆகவே பேரூர்க் கோயிலில்

தமிழ்க் கல்வெட்டுக்களும், கன்னடக் கல்வெட்டும் பரவத் தொடங்கின.

**மாணவன்**: மொழித் தகராறுகளும் புகுந்து விட்டனவோ?

**தேவி**: அதனைக் கூறுவானேன். சுந்தரமூர்த்திகள் நாளில் எல்லா வழிபாடுகளும் தூய்மையான செந்தமிழ்ப் பாடல்களினால் நடைபெற்றிருக்கக் கன்னடியர் ஆட்சி பெற்ற பிறகு இங்கு வடமொழி புகத் தொடங்கியது.

**மாணவன்**: இதுவும் ஒருவகை மாறுதலோ?

**தேவி**: வேறு என்ன வேண்டும். அதுவரை பட்டீசுரராக இருந்தவர் கோஷ்டீசுவரராக மாறினார் என்றால் அதன் காரணம் நாம் அறிய வேண்டாமா?

---

## காட்சி 9 ] [ கரு நாடகத்தார்

**மாணவன்**: சோழபாண்டிய வீழ்ச்சிக்குப் பிறகு தமிழ் அன்னையின் தன்னுரிமை மறைந்துவிட்டதன்றோ. கொங்கு மண்டலத்தின் நிலை எவ்வாறு ஆயிற்றோ தேவி.

**தேவி**: எவ்வாறு என்று சொல்லவேண்டுமா? கொங்குச் சோழருக்குப் பிறகே கொங்குநாடு பொலிவிழந்தது. வடக்கேயிருந்து தில்லி சுல்தான் படையெடுத்து ஹொய்சளரையும், மதுரையாரையும் சூறையடித்தான். கொங்குநாடும் அல்லலுற்று அழியத் தொடங்கியது.

ஆனால் துங்கபத்திரக் கரையில் மற்றொரு ஜோதி தோன்றிற்று. ஹரிஹர புக்காதியர் தோன்றி கருநாடக சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்து மதுரையை மீட்டு இந்து சமயத்தை நிலை நிறுத்தினதினால் தமிழருக்குத் தன்னுரிமை போயும் முகம்மதியப் படையெடுப்பிலிருந்து தப்பித்துக்கொண்டனர்.

**மாணவன்**: கருநாடக ஆட்சியில் பேரூர் எவ்வாறு இருந்ததோ?

**தேவி**: பேரூரும் கொடுமைகளுக்கு இலக்காகாமல் நன்கு பொலிவுடன் இருந்தது.

**மாணவன்**: அது கருநாடகத்தாரின் வீரத்தினாலும் இந்து மதாபிமானத்தினாலும் அன்றோ?

**தேவி**: ஆமாம். அப்போது நாடு அமைதியுற்றது. பல புலவர்கள் தோன்றி தமிழையும் சமயத்தையும் வளர்த்தினார்கள்.

**மாணவன்**: அவ்வாறு வளர்த்தின புலவர்களில் பேரூர்த் தொடர்பு கொண்டவர் யாரோ?

**தேவி**: மாணவ! உனக்குத் தெரியாதா. நமது கல்லூரியிலே நாள்தோறும் பாடப்படும் திருப்புகழ் நீ அறியாயோ?

**மாணவன்**: ஆம். அதுதான் அருணகிரி நாதர் அருளினது.

**தேவி**: அதைச் சொல் கேட்போம்.

**மாணவன்**:

“தீராப்பிணி தீர சீவாத் துமஞான
ஊராட் சியதான ஓர்வாக் கருள்வாயே
பாரோர்க் கிறைசேயே பாலாக் கிரிராச
பேராற் பெரியோனே பேரூர்ப் பெருமாளே.”

“.....மிச்ச ரோருக வச்ர பாணியன்
வேத வாழ்வே நாதா கீதா வயலூரா
வெற்பை யூடுரு வப்ப டாவரு
வேலா சீலா பாலா காலா யுதமாளி
பச்சை மாமயில் மெச்ச வேறிய
பாகாசூரா வாகா போகா தெனும்வீரா
பட்டி யாள்பவர் கொட்டி யாடினர்
பாரூராசூழ் பேரூராள் வார் பெருமாளே.

**தேவி**: திருப்புகழ் கேட்க மிக மகிழ்ச்சி. அதன் இனிய சந்தம்தான் செவிக்கு என்ன இனிமை! கருத்து உள்ளத்திற்கு உரம் ஊட்டுகின்றது.

**மாணவன்**: அருணகிரிநாதர் இங்கு வந்தாரா?

**தேவி**: மாணவ! இங்கு வராமலேயா அவர் பாடினார். விஜயநகரத்தில் பிரபுடதேவமாராயன் ஆண்ட காலத்தில் அருணகிரி நாதர் திருவண்ணாமலையில் தோன்றி தமிழ் நாடு முழுவதும் யாத்திரை செய்து அருமையான சந்தப் பாடல்களைப் பாடியபோது பேரூர் வந்தார். இங்கு மட்டுமல்ல. கொங்கு நாட்டில் சுமார் 30 தலங்களுக்குத் திருப்புகழ் அருளிச் செய்துள்ளார்.

**மாணவன்**: கருநாடகத்தார் காலம் என்று எப்படித் தெரிகின்றது?

**தேவி**: "அதல சேடனாராட" என்ற திருப்புகழில் பிரபுட தேவமாராயன் என்று வருவதை அறியவில்லையா?

**மாணவன்**: தேவி! மன்னிக்கவும், அறிந்தேன். அவர்கள் நேராட்சி புரிந்தனரா?

**தேவி**: இல்லை, அவர்கள் பிரதிநிதிகளை அனுப்பியே ஆண்டார்கள். ஒரு பிரதிநிதியின் பெயர் பர்வதராகுத்தன் என்று ஈரோட்டுச் சாசனம் கூறுகின்றது.

**மாணவன்**: தேவி, வேறு பிரதிநிதிகளும் இருந்தார்களா?

**தேவி**: ஆம்! உம்மத்தூர் தெற்கணாம்பித் தலைவர்களும் பிரதிநிதிகளாக இருந்தனர்.

**மாணவன்**: அவர்களுக்கும் பேரூருக்கும் தொடர்பு உண்டா?

**தேவி**: முன்னமே கூறியிருக்கின்றேன். தெற்கணாம்பி மாதையன்தான் பேரூர் திருக்குளம் வெட்டினான். அவிநாசியிலும் அவனே திருப்பணி செய்திருக்கின்றான்.

**மாணவன்**: அவர்களுடைய ஆட்சி எவ்வாறு இருந்தது?

**தேவி**: வடக்கே இருந்து தெலுங்கு கன்னடத் தொழிலாளர்கள் பெருவாரியாக இந்நாட்டிற்கு

வந்தார்கள். அவர்கள் வந்ததற்கு அடையாளம் பேரூரிலும் அவிநாசியிலும் கன்னடியக் கல்வெட்டுக்கள் இருப்பதேயாகும். பேரூர் வெளிப்பிரகாரத்தில் உள்ள சுப்பிரமணியர் கோயிலிலும் கன்னடியக் கல்வெட்டு இருப்பதைக் காணலாம்.

---

## காட்சி 10 ] [ மதுரை ஆதிக்கம்

**மாணவன்**: கருநாடகத்தார் தலைக்கோட்டையில் தோல்வியடைந்த பிறகு பேரூரில் ஏற்பட்ட மாறுதல் என்ன தேவி?

**தேவி**: மதுரையிலிருந்த நாயக்க மன்னன் சுயேச்சை அடைந்தான். அவன் வசத்தில் கொங்கு நாட்டோடு பேரூரும் சென்றது. திருமலைநாயக்கன் காலத்தில் பேரூர் நன்கு கவனிக்கப்பட்டது. அரசனுடைய மைத்துனன் அளகாத்திரி நாயக்கன் கொங்கு நாட்டில் பிரதிநிதியாக ஆண்டபோது கோயிலுக்குத் திருப்பணி செய்தான். பேரூருக்கே பெருமை தரும் கனகசபை அப்போதுதான் கட்டப்பட்டது.

**மாணவன்**: தேவி! அதைப்பற்றி ஒரு கட்டுக்கதை வழங்குகிறதே, சரியா?

**தேவி**: ஏன் சரியில்லை. அம்மண்டபத்திலுள்ள அருமையான சிற்பத் தூண்களில் குதிரைத் தூண் உடைந்திருக்கின்றதல்லவா. அதுதான் அக்கதைக்கு

ஆதாரம்.

**மாணவன்**: எல்லோருக்கும் அக்கதை தெரியும். அம் மண்டபம் கட்டி முடிந்ததும் அரசன் குடமுழுக்கு விழா நிகழ்த்த நாள் குறித்திருந்தான். கணக்கற்ற மக்கள் வந்திருந்தார்கள். அதில் ஒரு வாலிபன் அத் தூணைக் கவனித்து "இது பிசகானது. சிற்பி தவறு செய்து விட்டான்" என்றான். பொதுமக்கள் கேட்கவும் அஞ் சினார்கள். அரசன் காதுக்கு அது எட்டியது. அரசன் அவனைக் கூப்பிட்டுக் கேட்கவே அவன் அதனை வற்புறுத்திப் பேசினான். உடனே சந்தனம் பூசப்பட்டது. ஓரிடம் மட்டும் ஈரம் உலரவில்லை. அந்தவிடத்தை உடைத்துப் பார்த்ததில் ஒரு தேரை இருந்தது. உடனே சிற்பி தனது கையை வெட்டிக்கொண்டான். பின்னர் விசாரித்ததில், அவ் விளைஞன் சிற்பியின் சொந்த மகன் என்றும் படிக்கச் சென்றவன் திரும்பினான் என்றும் தெரியவந்தது.

**தேவி**: உனக்கும் இக்கதை தெரிந்திருக்கின்றது. இது போன்ற கதை கன்னட நாட்டில் பேளூரிலும் வழங்குகின்றது. மற்றும் அம்மண்டபத்தில் கல்லினாலே செய்யப்பட்ட சங்கிலித் தொடர்கள், கல் தாமரை, திரிமூர்த்திகளின் திருவுருவங்கள் முதலியவைகளைக் காணலாம். சில, வெகு நுட்பத்துடன் வேலை செய்யப்பட்டிருக்கின்றன.

**மாணவன்**: ஆமாம். இதைப்போல் வேலைப்பாடு இந்திய நாட்டிலேயே இல்லை என்னலாம்.

**மாணவன்**: தேவி! மதுரை நாயக்கர் ஆட்சி மிகச் செழிப்பாக இருந்ததில் பேரூர்க் கோயில் எவ்வாறு மைசூர் ஆட்சிக்குச் சென்றதோ?

**தேவி**: மகனே! அதுதான் நமது ஊழ்வினை என்று சொல்ல வேண்டும். ஆகூழ் இல்லாவிடின் கைமாறி பிறர் ஆட்சிக்குள் அடிமையாகப் போவது நம் விதிபோல் இருக்கின்றது. தமிழ் நாட்டில் ஒற்றுமையின்றி ஒருவருக்கொருவர் பகைமை கொண்டு பிறருக்கு ஆளாகி வருந்துவதே நம் நிலைமையாகிவிட்டது. மதுரை முற்போக்கு அடைவது மைசூர் உடையார்களுக்குப் பிடிக்கவில்லை. சிற்றரசர்களாக இருந்த சீரங்கப் பட்டணத்து உடையார்கள் தங்கள் வல்லமையைப் பெருக்கிக் கொண்டு மதுரை மீது தண்டெடுத்தார்கள். இடையில் இருந்த கொங்கு நாடு போர்க்களமாகிவிட்டது. கி.பி. 1672-ல் நடந்த ஈரோட்டுப் பெரும் போருக்குப் பிறகு கொங்கு நாடு மதுரையைவிட்டு மைசூர் வசம் சென்று விட்டது. பேரூரும் அவ்வாறே ஆகிவிட்டது.

**மாணவன்**: மதுரையார் தொடங்கின பணி என்ன ஆயிற்று?

**தேவி**: அதைக் கூறத்தான் வருத்தமாக இருக்கின்றது. கனகசபை வேலை அரைகுறையாகி ஆயிரக்கால் மண்டபமும் முடிவு பெறாமல் நிலத்திற்குள் கால் களெல்லாம் புதைக்கப்பட்டன.

**மாணவன்**: அதனால்தான் திருவிழாக்களைக் காவணம் போட்டு நடத்தினார்களோ?

**தேவி**: ஆமாம். சென்ற 25 ஆண்டுகளில்தான் ஒருவாறு உள் கட்டிடம் பூர்த்தி ஆகி இருக்கின்றது.

**மாணவன்**: மைசூர் ஆட்சியில் நன்மை ஏதாவது ஏற்பட்டதா?

**தேவி**: நன்மை என்று சொல்வதற்கில்லை. கோயில் தொடர்பில் அதிகம் தீமையில்லை. தமிழ் நாட்டில் கன்னடிய மக்கள் குடியேற்றம் பெற்றதே ஒரு சிறப்பு.

**மாணவன்**: முகம்மதியர்கள் வந்ததாகச் சொல்லு கிறார்களே அது என்னவோ?

**தேவி**: வட நாட்டினின்றும் முகம்மதியப் படையெடுப்பு நேரவில்லை. உள் நாட்டிலேயே ஒரு சாதாரண ஆள் போர் வீரனாகி மைசூர் அரச வமிசத்தையே கவிழ்த்து விட்டான். அவனும் அவன் மகனும் சுமார் 50 ஆண்டுகள் வரை கொடுங்கோலாட்சி நடத்தினார்கள்.

**மாணவன்**: அப்போது பேரூர் என்ன கதி அடைந்தது?

**தேவி**: அதைக் கூறவும் வேண்டுமா? திப்பு சுல்தான் ஒரு முறை கோவை வந்தான். பேரூரின் சொத்துக்களையும் வருவாய்களையும் கண்டான்; மனம் பொறுக்கவில்லை. முன்பு தமிழரசர்கள் கொடுத்திருந்த மானியங்களைப் பாதி இறக்கி விட்டான். இந்தப் புண்ணியம் செய்து

விட்டு சீரங்கப்பட்டணப் போரில் உயிர் துறந்தான்.

**மாணவன்**: பிறகு என்ன ஆயிற்று?

**தேவி**: ஆங்கிலேயர் வந்தனர். பழையபடியே மானியத்தைத் திருப்பிக் கொடுத்தனர். இரண்டு முழு ஊர்களும் கோயிலின் திருப்பணிச் செலவுகட்காக விடப்பட்டன,

---

**காட்சி 12 ] [ தற்காலம்**

**மாணவன்**: தற்போது கோயிலின் நிலைமையில் மாறுதல் இல்லையா?

**தேவி**: மாறுதல் உண்டு. திருப்பணிகள் 50 ஆண்டுகளுக்கு முன் நடைபெற்றன. பல செல்வர்களும் அறம் செய்வோர்களும் ஆலயத்தை நல்ல நிலையில் வைத்துள்ளார்கள்.

**மாணவன்**: சமயக்கல்வி தொடர்பாக யாதும் கூறவில்லையே!

**தேவி**: சிறப்பாக சில நூல்கள் தோன்றி இருக்கின்றன. அவைகளைப் பற்றி நீயே அறிவாய்.

**மாணவன்**: சாந்தலிங்க அடிகளார் நூல்கள் தானே.

**தேவி**: அடிகளார் பேரூர் ஆற்றங்கரையில் சமாதி

அடைந்தார். அவர்கள் குமார தேவருக்குத் தீட்சை தந்துவிட்டுப் பேரூரில் தங்கி நான்கு மறைகள் போல நான்கு நூல்களை அருளி இருக்கின்றார். கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்பனவாம் அவை. அவைகளில் கடவுள் வணக்கம் மிக இனிமையானது. சொல்லு பார்ப்போம்.

**மாணவன்**:

“இன்பமாய தறாதிடை யோங்கவும்
துன்ப மாயது தூரத்துள் நீங்கவும்
முன்பராபரன் மொய்குழ லோடணைந்து
அன்பின் ஈன்றதோர் ஆனையைப் போற்றுவாம்”

**தேவி**: என்ன அரிய கருத்து. கொலை மறுத்தலைப்போல ஒரு நூல் இதுவரை தமிழ் நாட்டில் தோன்றவில்லை. கொல்லாமை, புலால் உண்ணாமை என்பன குறளில் கண்ட இலக்கணம். அவற்றிற்கு ஓரிலக்கியமாக இந்நூல் ஏற்பட்டிருக்கின்றது.

**மாணவன்**: அதில் ஒரு சிறந்த கருத்தை எனது ஆசிரியர் கூறி இருக்கிறார்.

**தேவி**: அது என்ன மகனே?

**மாணவன்**: மனிதன் இறந்தால் இடுகாடு சுடலையாகும். ஆடு, கோழி இறந்தால் இடுகாடு மனிதனுடைய வயிறு ஆகும். இது எத்தனை பொருத்தமான உவமை. இதைப்போல புலால் உண்பவர்களை இழிவுபடுத்தும்

வேறு உவமை ஒன்று கண்டதுண்டோ?

**தேவி**: மாணவ! இன்னும் எத்தனையோ உவமைகள் உண்டு. அவைகளையும் நன்கு படி. உனக்கு ஞானம் உண்டாகும்.

**மாணவன்**: தேவி! மற்ற சைவ மடங்களும் பேரூரில் பங்கு கொண்டிருக்கின்றன அல்லவா?

**தேவி**: ஆமாம். திருவாவடுதுறையார் இங்கே ஒரு மடத்தை ஏற்படுத்திச் சொத்தும் வைத்திருக்கின்றார்கள். இரண்டு நூற்றாண்டுகட்கு முந்தி அம்மடத்தைச் சேர்ந்த சிவஞான முனிவருடைய மாணாக்கர் ஆகிய கச்சியப்ப முனிவர் பேரூரில் சிலகாலம் தங்கிப் பேரூர்ப் புராணம் அருளியிருக்கின்றார். அது ஒரு சிறந்த நூல். அதனுடைய இலக்கண இலக்கியச் சிறப்புக்கள் மிகப் பெயர் பெற்றவை. அதில் ஏதாவது ஒரு பாடலை நீ கூற முடியுமா?

**மாணவன்**:

"பருதியொடு வெண்மதி பரிக்க வொளி நல்கும்
உருகெழு கனற்புதல்வன் ஆண்ட ஒரு சீரால்
இருசுடர் உயிர்த்தவர்கள் ஆண்ட இரு நாட்டின்
குருவென விளங்கியது கொங்குவள நாடு "

**தேவி**: வெகு நன்றாக இருக்கின்றது. இனி வேறு சில புலவர்களும் பற்பல பிரபந்தங்களை அருளி இருக்கிறார்கள். அவைகளில் சதகம், மாலை, பிள்ளைத் தமிழ், தூது, ஏசல், கோவை, அந்தாதி, கலி வெண்பா,

ஊசல், வண்ணம், பந்தடி, உலா முதலியவைகள் இருக்கின்றன.

**மாணவன்**: இவைகளைப் பாடிய புலவர்களில் சில சிறந்தவர்களின் பெயர்களைக் கூறவும்.

**தேவி**: வாசுதேவ முதலியார் (திருமுருகன் பூண்டிப் புராணம்), குட்டியண்ண கவுண்டர் (அரசம்பல விருத்தம்), கந்தசாமி முதலியார், (ஊசல்) சுப்பிரமணிய முதலியார், (கும்மி) முத்து நயினாத்தை முதலியார் (பேரூர் கோவை, பச்சை நாயகியம்மன் பிள்ளைத் தமிழ்).

**மாணவன்**: அவர்கள் தமிழ் இலக்கியத்திற்குச் செய்த நன்மை யாவை?

**தேவி**: ஓராட்டுக்குப்பை செட்டிபாளையம் வாசுதேவ முதலியாரவர்கள் இயற்றிய பல நூல்களுள் திருமுருகன் பூண்டித்தல புராணமும், பவானித்தல புராணமும் ஆகும். அவர் பெரும்பாலும் பண்டைய தமிழ் இலக்கியங்களைப் பின்பற்றியே எழுதியிருக்கின்றார். சுந்தரர் சரிதம் பெரிய புராணத்தை ஒட்டி இருக்கின்றது. இன்னும் பிரபந்தங்கள் சிலவற்றை எழுதியிருக்கின்றார்.

**மாணவன்**: மற்ற புலவர்களோ?

**தேவி**: மற்றவர்களில் செட்டிபாளையம் குட்டியானை முதலியார் பல தனிப்பாடல்களையும், முத்து நயினாத்தை முதலியார் பச்சை நாயகியம்மன் பிள்ளைத் தமிழ், பேரூர்க் கோவை என்பவைகளையும், கோவை குட்டிக் கவுண்டர்

பேரூர் அரசம்பல விருத்தம் என்பதனையும், கோவை இராமசாமிக் கவிராயர் திருப்பேரூர் சிகையறுத்தான் வண்ணம் என்பதனையும், தொண்டாமுத்தூர் சிதம்பர தாண்டவராய முதலியார் பேரூர் மரகத மஞ்சரி என்பதனையும், வடவள்ளி அருணாசலக் கவிராயர் பேரூர் உலா, அவிநாசி உலா, கவிராயர் பேரூர் யவன காவியம், மருதாசலக்கடவுள் பிள்ளைத் தமிழ் முதலியவைகளையும் கும்பகோணம் சபாபதிப் பிள்ளை பேரூர் அந்தாதி கோவை சௌடாம்பிகை மாலை முதலியவைகளையும், போளுவாம்பட்டி ஆறுமுகம் பிள்ளை பட்டி விநாயகர் மாலை, வாகை விநாயகர் மாலை என்பவைகளையும், வித்துவான் கந்தசாமி முதலியார் பேரூர் பிரபந்தங்கள் ஆறையும், சந்திரசேகரம்பிள்ளை பல தனிப்பாடல்களையும், துடிசை சுந்தர முதலியார் திருமந்திர உரையினையும், திருச்சிற்றம்பலம் பிள்ளை மாணிக்கவாசகர் வரலாறு முதலிய 8 நூல்களையும், சிரவணபுரம் கந்தசாமி சுவாமிகள் பேரூர்ப் பிரபந்தங்கள், கவுசைப் புராணம் முதலிய 66 நூல்களையும் பாடியுள்ளனர். இவைகளைத் தவிர பல தற்காலப் புலவர்கள் பல நூல்களையும் எழுதி உள்ளார்கள்.

---

## காட்சி 13 ] [ ஆறைநாடு

**மாணவன்**: அம்மாதேவி! என்ன விந்தையான வரலாறு. பேரூர்ப் பட்டீசர் வரலாறு முழுவதும் உன் சீரிய வரலாறாகவே இருக்கின்றதே. உனது கடைக் கண்ணோட்டம் இல்லை எனில் பேரூரின் பெரும் புகழ்

என்னவாகி இருக்குமோ?

**தேவி**: அப்படிக் கூறாதே தம்பி! ஆறை நாடு முழுவதுமே நீர்வளம் நிலவளம் கொண்டது. அதனாலேதான் பூண்டி முதல் சாமளாபுரம் வரையில் எங்கும் வயலும். தோப்பும், தோட்டமும் நிறைந்து கிடக்கின்றன. இதுவரைக்கும் பேரூர் மட்டுமே ஆராய்ந்தோம். இனியும் கிழக்கேயுள்ள இடங்களைப் பற்றி நீ கேட்கவில்லையே.

**மாணவன்**: அம்மா! நானோ படிக்கும் மாணவன், பேரூர் மட்டிலுமே கண்டிருக்கிறேன். மற்றும் சுற்றிக் காண எனக்கு ஒய்வு எங்கே இருக்கின்றது? கணக்கில்லாத தமிழ் நூல்களைக் படிக்க நேரம் ஏது? ஆகவே அவைகளின் பெருமையை நேரில் அறிய இயலாதவனாக இருக்கின்றேன். எனக்குச் சிறிது அருள்புரிந்து கிழக்கேயுள்ள நாட்டுச் செய்திகளைக் கூறுவாயாக.

**தேவி**: பேரூருக்குக் கிழக்கே உள்ள ஊர் கோவை என்று அறிவாய். அது ஒரு வணிகத் தலம். அதைவிடத் தற்போது கைத்தொழில்கள் நிரம்ப உள்ளன. இன்னும் இயந்திர நகரம் என்னலாம். மேற்கும் தெற்கும் நான் பாய்ச்சி நிரப்புகின்ற குளங்கள் ஏழு உண்டு. வடக்கும் தெற்கும் கரிசல் நிலம். அங்கே வெண் பருத்தி பொன்னாக மாறுகிறது.

**மாணவன்**: அங்கே செல்வம் நிரம்பி இருக்கிறது. இறையன்பு இருக்கிறதா?

**தேவி**: இருக்கிறது. பெரிய கோயில்கள் இல்லை. கோட்டை, பேட்டைக் கோயில்களும் ஏழு கன்னியர் கோயில்களும் உண்டு. முந்தியவை கிழக்கேயும் பிந்தியவை வடக்கேயும் நோக்கியுள்ளன. அவற்றிற் சிறந்தது கோவன் என்ற இருளர் தலைவன் வணங்கி வந்த குலதெய்வம் கோனியம்மன் ஆகும். அக்கோயிலில் பெருந் திருவிழா மாசித் திங்களில் மிக நன்றாக நடைபெறும். ஒவ்வொரு குலத்தாருக்கும் தனித்தனியாக அம்மன் கோயில்கள் இருக்கின்றன. அவைகளெல்லாம் நன்றாகப் பாராட்டப் படுகின்றன.

**மாணவன்**: கோவைக்கு அடுத்த சில கற்களுக்குள்ளாக சில ஆலயங்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவைகளைப்பற்றி அறிய விருப்பம் மிகவுண்டு தாயே.

**தேவி**: கோவைக்கு அடுத்த தெற்கே குறிச்சியில் வாலீசுவரர் கோயிலும் அதற்குக் கிழக்கே வெள்ளலூர் என்ற அன்னதான சிவபுரியில் தேனீசுவரர் கோயிலும், அதற்கு வடகிழக்கே சிங்காநல்லூரில் சிங்களாபுரம் வாமனர் கோயிலும், கிழக்கே இருகூரிலும் அதற்குக் கிழக்கே உள்ள சூலூரிலும் சிவபிரான் கோயில்களும் அதற்குக் கிழக்கே சாமளாபுரத்தில் சியாமளாபுரம் கோயிலும் இருக்கின்றன. வடக்கே துடியலூரில் விருந்தீசுரர் கோயிலும் சிறிது வடகிழக்கில் இடிகரையில் வில்லீசுவரர் கோயிலும், சிரவணம்பட்டியில் சேவணன் கோயிலும் இருக்கின்றன.

**மாணவன்**: இவைகள் பண்டைய கோயில்களா? சான்றுகள் உளவோ?

**தேவி**: ஆமாம்! எல்லாம் பண்டையக் கோயில்களே. வெள்ளலூர் மிகப் பழையது. கி.பி. 9–ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. அதனருகில் ஓடும் எனது கரையில் உள்ள அழகு நாச்சியம்மன் கோயிலிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இருபது ஆண்டுகளுக்கு முன் இங்கே 105 உரோமானிய நாணயங்கள் கிடைத்தன. அதற்கு ஒருகல் தெற்கில் மண்டபக் காட்டில் பண்டைய சின்னங்கள் கிடைத்தன. சிங்காநல்லூர், சியாமளாபுரம் என்ற இருகிராமங்களும் சோழன் அரச குமாரிகள் கொடுத்த பிரம தானங்கள் ஆகும். இருகூர், இடிகரை, சூலூர் இவைகள் கல்வெட்டுக்களால் புகழப் பட்டவை எனச் சோழனது பூர்வபட்டயம் விதந்து கூறுகின்றன.

**மாணவன்**: மற்ற சிறப்புக்களும் இங்கே உண்டோ?

**தேவி**: எனது தாள்கள் எங்கெங்கு பாய்கின்றனவோ அங்கெல்லாம் பண்டைய சின்னங்களும் சமய நிலையங்களும் இருக்கின்றன. மற்றொரு குறிப்பிடத்தக்க செய்தி. கோவைக்குத் தெற்கில் வாலாங்குளக் கரையில் மேற்கே சிறிது தொலைவில் ஒரு வீரக் கல் இருக்கிறது. அது சங்க காலத்துச் செய்தியைக் கூறுகிறது. வீரர்கள் நாட்டிற்காகப் புலியோடாவது போரிலாவது உயிர் விட்டால் கல்லில் உருவம் செய்து நட்டு வழிபாடு செய்வதுண்டு. அப்படிப்பட்ட வீரக்கல் ஒன்று இருக்கிறது. இதனைக் கல் நிற்றல் என்று கூறுவதும் உண்டு. இதனை இன்றும் சென்று காணலாம்.

**மாணவன்**: தேவி! ஆறை நாட்டில் பெரும் புலவர்கள் இருந்ததாகத் தெரியவில்லையே.

**தேவி**: ஏன் இல்லை? தமிழ்ப் புலவர்கள் இலை மறை காய் போல் விளக்கமின்றி இருக்கிறார்கள். அது அடக்கம் என்ற பெருங் குணத்தின் தன்மையாகும். அவ்விலையை நீக்கிக் காயைக் கண்டு அதனை அருந்துவது மக்களுடைய ஊக்கக் கடமையாகும்.

**மாணவன்**: அம்மா அப்படி யார் இருந்திருக்கின்றார்கள்? ஒரு எடுத்துக்காட்டு கூறியருளுக.

**தேவி**: ஆறை நாட்டுப் புனிதத் தலமாகிய அவிநாசியில் ஆறைகிழார் என்ற பெரும் புலவர் ஒருவர் இருந்திருக்கின்றார். அவர் கொங்கு வேளாளர் வகுப்பைச் சேர்ந்த ஒரு சிறந்த சைவர். அவர் கார் மண்டல சதகம் என்ற அரிய நூலை வெளியிட்டிருக்கின்றார். அது கார் காத்த வேளாளரின் பெருமையைக் கூறும் நூல் ஆகும்.

**மாணவன்**: சோழ, பாண்டிய, கொங்கு, தொண்டை மண்டல சதகங்களைப் போல் அதுவும் ஒரு சதகமா தேவி? அப்படியாயின் கொங்கு மண்டல சதகம் என்ற ஒரு நூல் இருந்திருக்கக் கார் மண்டலத்தைப் பற்றி ஒரு கொங்கு வேளாளர் ஏன் பாடினாரோ?

**தேவி**: மாணவ! உன்னை மெச்சினேன். நீ நன்கு வினா வினாய். ஆறை கிழார் கொங்கு நாட்டினராய் இருந்தும் அவருடைய ஆசிரியர் கார் மண்டலத்துத் திருநாராயண புரத்து (மேலைக் கோட்டை)க் கார் காத்த வேளாளரான மாதவ யோகிகள் என்பார் மீது வைத்திருந்த பேரன்பினால் தன் ஆசிரியருடைய மண்டலத்தைப் பாடி நன்றி செலுத்த எண்ணி அச்சதகம் பாடினார்.

**மாணவன்**: தேவி! புலவர்களுடைய நன்றியறிவு மிகவும் பொலிவுடன் விளங்குவதைக் காண்கின்றோம். அந்நூலைப் படிக்க விழைக்கின்றேன்.

**தேவி**: எடுத்துக் காட்டாகக் கார் மண்டலச் சிறப்பைக் காட்டும் ஒரு பாடலைப் படிப்போம்.

**மாணவன்**:

“கொங்கு மணக்கு மோர் பக்கல்
குருகார் மணக்கு மோர்பக்கல்
தெங்கு மணக்கு மோர்பக்கல்
திகழும் தொண்டை யோர்பக்கல்
நுங்கு மணக்கு மோர்பக்கல்
நுவலுங் கடம்பா மோர்பக்கல்
கங்கர் மணக்குந் தலைவனத்துக்
கார்மண் டலச்சீ ரீதாமே”

---

## காட்சி 14 ] [ பழனையும் குறும்பு நாடும்

**மாணவன்**: தேவி! உன்னுடைய தண்ணருள் பெற்றது ஆறை நாடு மட்டும் என்று மக்கள் எண்ணுகின்றனர். மற்றும் கிழக்கே உள்ள நாடுகளிடம் உன் அருள் கூட்டு கின்றனையோ?

**தேவி**: மகனே! நான் செல்லுகின்ற இடங்களில் எல்லாம் எனது அருமை மக்களுக்கு நான் உதவி புரியத்தான் எண்ணுகின்றேன். ஆனால், இறைவன் கருணை

அத்தனை தொலைவு செல்லுகின்றதில்லை. பொதுவாக அவன் திருவடியிலிருந்து அவன் ஆணைக்கு உட்பட்ட மற்ற அமரர்கள் திருவடிகளிலிருந்தும் வழியும் வெள்ளங்கள் ஆறை நாட்டிலுமே பாய்கின்றன. அதுவரையில் உள்ள அணைகளிலிருந்து நன்னீர் பிடித்துக் குளங்களில் நிறைத்து உழவர்கள் தன்கையே தனக்கு உதவி என்ற கொள்கையின்படி அந்நீரைப் பாய்ச்சிப் பயன் பெறுகின்றனர். அதிலும், கிழக்கே செல்லச்செல்ல நீர் மிகவும் குறுகி விடுகின்றது. முந்நாளில் செழித்திருந்த பட்டணமும், சூலூரும்கூட இப்போது வறண்டு பாலையாகின்றது. ஏதோ ஓரோர் ஆண்டு மட்டும் செழித்து நிற்கிறது.

**மாணவன்**: தேவி! ஆறை நாட்டிற்குக் கிழக்கில் உள்ள நாடுகள் அபாக்கியம் பெற்றவைகளோ!

**தேவி**: அப்படிச் சொல்வதற்கில்லை. மழை வந்தால் உப நதிகளிலிருந்து வருகின்ற காட்டாறுகளில் வெள்ளம் பெருகி அவைகளும் செழிக்கின்றன.

**மாணவன்**: அந்த நாடுகளும் உபநதிகளும் எவை?

**தேவி**: வடபாரிசார நாட்டிலிருந்து வண்ணாற்றங்கரை, நள்ளாறு என்பவைகளும் தெற்கே நாடுகாணிமேட்டிலிருந்து கோயில் வழி முதலிய காட்டாறுகளும் குறும்பு நாட்டிலிருந்து சில ஓடைகளும் என்னோடு கலக்கின்றன.

**மாணவன்**: தேவி! இங்கேயும் புனித இடங்கள் உண்டோ?

**தேவி**: வடபாரிசார நாட்டில் திருவாசகம் பெற்ற திருமொக் கொணீசுரமும் வைப்புத் தலமாகிய சேவூர் வாலீசுவரமும், பாடல் பெற்ற புக்கொயூளிர் அவிநாசியீசுவரமும், முருகன் பூண்டி முருக நாதீசுவரமும் அந்நாடுகளில் உள்ளன.

**மாணவன்**: இவைகள் மிகச் சிறந்தவைகள் என்று எண்ணுகின்றேன். மொக்கணீசுவரத்தைப்பற்றி ஒரு கட்டுரை படித்திருக்கின்றேன். கொங்கு மண்டல சதகமும் கூறுகின்றது. மற்றவையும் அப்படியே.

**தேவி**: அவிநாசியில் சுந்தரருடைய முதலைவாய்ப் பிள்ளை அற்புதத்தைப் படித்திருக்கலாம். அவிநாசிப் புராணத்தில் இளையான் கவிராயர் அதனை மிக நன்றாய் விரித்திருக்கின்றார். அதுபோலவே திருமுருகன் பூண்டியில் முருகநாதர் திருக்குளம் பித்தத்தையும் நீக்குகிறதாம். இதற்கும் சுந்தரர் பாடல் உண்டு. இங்கே சேரமான் தந்த பொருள் வேடர்களால் பறிக்கப்பட்டது, இந்தத் தலபுராணம் வாசுதேவ முதலியாரால் பாடப் பெற்றது தம்பி! அவிநாசிப் பாடல் ஒன்று கூறுவாயாக!

**மாணவன்**:

“எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே உள்குகின் றேன்உணர்ந்
துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே”

**தேவி**: நன்றாக இருக்கின்றது. திருமுருகன் பூண்டிப்

பாடல் சொல்லு.

**மாணவன்**:

"கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர்
விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக்கூறை
கொண்டாறலைக்கு மிடம்
முடுகு நாறிய வடுகர்வாழ் முருகன்
பூண்டிமாநகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும்
எத்துக்கிருந்தீரெம் பிரானிரே"

**தேவி**: என்ன வேடுபறி போலவே கரடு முரடாகவே இருக்கிறதே.

**மாணவன்**: தேவி! "கொங்கில் குறும்பில் குரக்குத்தளியாய்" என்று சுந்தரர் பாடிய குறும்பு நாடும் குரக்குத்தளியும் எங்கே இருக்கின்றன? அவை உனது அருள் படைத்தவை என்று எண்ணுகின்றேன்.

**தேவி**: மாணவ! உண்மைதான். குறும்பு நாடு என்பது திருப்பூருக்குக் கிழக்கே உள்ளது. அதில் முகுந்தபுரி என்றும் குரக்குத்தளி என்றும் சுக்கிரீவவீச்சரம் என்றும் புகழ் பெற்ற வைப்புத் தலம் கூளிப்பாளையம் இரயில் நிலையத்திற்குத் தென்கிழக்கில் நஞ்சராயன் குளத்திற்கருகே உள்ளது.

**மாணவன்**: அதன் பெருமை என்னவோ?

**தேவி**: சிற்ப நூல் வல்லாரிடம் ஒரு பழமொழி வழங்குகிறது. அதுதான் 'பேரூர், பெரியபாளையம், தாரமங்கலம், தாடிக்கொம்பு' என்பது, இவைகளைத் தவிர வேறு எதுவும் செய்வேன் என்று ஒரு சிற்பி ஒப்பந்தம் செய்வானாம்.

**மாணவன்**: நஞ்சராயன் என்பவன் யார்?

**தேவி**: இவன் தான் கன்னட நாட்டு உம்மத்தூர்த் தலைவன். இவன் நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் கொங்கு நாட்டைப் பிரதிநிதியாக ஆண்டவன். அவன் இவ்வூரில் ஒரு பெரிய பாசனக் குளத்தைக் கட்டி குடியானவர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்தான். இவனது செயல்களைப் பற்றிக் கல்வெட்டுச் சான்றுகளும் உண்டு.

**மாணவன்**: மற்றும் வேறு எந்த நாடு இங்குண்டோ?

**தேவி**: வடக்கே பழனை நாடு உண்டு. அங்கே மேற்கு பார்த்த சன்னிதியாக பெருமாநல்லூர் என்ற ஒரு கல் வெட்டுத் தலம் இருக்கிறது.

**மாணவன்**: இவைகள் எல்லாம் உன் அருட் பார்வை'யில் உள்ளதால்தான் இச் சிறப்புக்களைப் பெற்றிருக்கின்றன.

**தேவி**: கொங்கு நாட்டில் மேற்கு பார்த்த சன்னிதிகள் இருப்பது வியப்பன்றோ. அவைகள் கேரளத்திற்கும் தமிழ் நாட்டிற்கும் உள்ள தொடர்பை எடுத்துக் காட்டுகின்றன அல்லவா?

**மாணவன்**: ஆம் தேவி. பழனிக்குச் சென்றால் வழிபடுவோரில் பெரும்பான்மையோர் மலையாளிகளாக இருப்பது இதனை நிரூபிக்கிறது.

---

**காட்சி 15 ] [ பூந்துறை நாடு**

**மாணவன்**: மேலும் தேவி! நீ சென்றருளுகின்ற மற்றக் கீழைநாடு எப்படிப்பட்டதோ?

**தேவி**: அதனைப்பற்றிச் சொல்லுவானேன். மழை வெள்த்தினால் நன்றாகப் புல் விளையும் மேட்டுப் பாங்குகளே இங்கு உண்டு. எனது ஆற்றில் ஆடிக்கொருதரம் அமாவாசைக் கொருதரம்தான் வெள்ளம் வரும். ஆனால், அதுபோதும் கட்டைப் புல் விளைய. அங்கே உள்ள முல்லை நிலத்தில் மிகச் சிறந்த கால்நடைகளே வளரும். உலகப் பெரும் புகழ் கொண்ட காங்கய நாட்டு கட்டுவளிகள் உண்டு. மற்ற நன்செய் நாடுகளைவிட பத்து மடங்கு விலையும் உழைப்பும் கொண்டவை. பசுக்கள் முதல் தரமான தேம் பால் தரும். இங்கே நெய், வெண்ணெய், தயிர் இவைகளுக்குப் பஞ்சம் இல்லை. நிலத்து உழவர்களும் மிக உழைப்பாளிகளாக இருப்பார்கள். அவர்களின் தலைவர்களைப் பட்டக்காரர்கள் என்பர்.

**மாணவன்**: இங்கே சமய நிலையங்களும் உண்டா?

**தேவி**: ஆற்றோரங்களில் பழைய கோட்டை,

நத்தக்காறையூர், முத்தூர் முதலிய பழைய தலங்கள் உண்டு. அருகில் சிவகிரி, கன்னபுரம், கொடிமுடி முதலியவைகள் உண்டு.

**மாணவன்**: இவைகளைக் கேட்டிருக்கின்றேன். மக்கள் சமயப்பற்று கொண்டவர்களா?

**தேவி**: சமய அறிவு உண்டு. ஆனால், பெரும் பான்மையானவர்கள் மறஅன்பு கொண்டவர்கள். மிக முரட்டுத் தன்மையான சூழ்நிலையில் வசிப்பவர்கள், ஆகையால் கண்ணப்பர் போன்ற அன்பே இவர்களிடம் உண்டு. மிக எளிதில் கோபம் கொண்டு செய்வது அறியாமல் செய்து முடிப்பர். “குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தலரிது” என்பது இவர்களுக்கே பொருந்தும்.

**மாணவன்**: இவர்கள் மறக்கருணை வாய்ந்தவர்கள் போலிருக்கின்றனர்.

**தேவி**: ஆமாம். நன்றாகச் சொன்னாய். கல்லில் நார் எடுப்பது போல மண்ணில் நீர் எடுத்து வேளாண்மை செய்து பிழைப்பர்.

**மாணவன்**: இறுதியில் சேரும் இடம் யாதோ?

**தேவி**: முதலில் செழுமையில் தோன்றினது போல இறுதியிலும் செழுமையில் முடிவு அடைவேன். கொடுமுடிக்கருகில் சிறிது தொலைவில் நொய்யல் நிலையத்திற்கருகில் காவேரி என்னும் என் தாயுடன்

நான் குடும்பம் நடத்தச் செல்லுவேன். தாயைக் காணும் பொருட்டு நெருங்கிச் செல்லச் செல்ல கண்ணுக்கினிமையான குளிர்ந்த வயல்களும் தோப்பு களும் எனது இருமருங்கிலும் இருக்கும்.

**மாணவன்**: 'தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்' என்ற கருத்துக்கு மாறாக தொடங்குங்கால் இன்பமாய் இடையில் துன்பமாய் இறுதியில் இன்பமாய் நின்னுடைய சூழ்நிலை இருக்கின்றதல்வா?

**தேவி**: அப்படி ஏன் சொல்லுகின்றாய். எனக்குத் துன்பமே இல்லை. இடையில் துன்பம் போல தோன்றுமே ஒழிய என் மக்களுக்கு அங்கும் இன்பமே உண்டு.

**மாணவன்**: எப்படி தாயே?

**தேவி**: பாடுபடுகிறவனுக்கு முயற்சிதன் மெய் வருத்தக் கூலி தரும் என்றாற்போல் தொடக்கத்தில் செழிப்பு இருந்தாலும் அணைகட்டி உழுது பயிரிட்டால்தான் விளைவு கிடைக்கும். மடி உள்ளவனுக்கு எங்கு இருந்தாலும் ஒன்றே. இறுதியிலும் அப்படியே. இடையில் இருக்கும் முல்லை நிலத்தோர்கள் சிறிது உழைத்தால் போதும் பருத்தி, கருந் தானியங்கள், பால், தயிர் முதலியன மிகுதியாகக் கிடைக்கும். கோவை வட்டத்திற்கு நன்செய் நிலங்கள் செல்வாக்கு தருகின்றனவா? புன்செய் கரிசல் நிலம் செல்வாக்குத் தருகின்றனவா? சிறிது ஆய்ந்துபார்.

**மாணவன்**: தேவி! எனக்கு இப்போது விளங்கிற்று. குளிர் மலைகளில் கோரோசனம், கஸ்தூரி சூட்டுப் பொருள்கள்

விளைகின்றன. பாலைவனங்களில் நுங்கு, ஈச்சம் பழம், தருபூசு முதலிய குளிர்ச்சிப் பொருள்கள் விளைகின்றன. இவைகளெல்லாம் அன்னையாகிய நினது அருள் நோக்கேயாகும்.

**தேவி**: மாணவ! மற்றொன்று நீ அறியவேண்டும். நான் என் அன்னையோடு சேருமிடத்திற்கு அருமையில் கொடுமுடி என்ற ஒரு புனிதத் தலம் இருக்கிறதல்லவா? அங்கே மூவர் பெருமக்களும் இருந்து அருமையான தேவாரங்களை ஓதியிருக்கிறார்கள். அவைகளில் சுந்தரருடைய தேவாரம் ஒப்பற்ற சிறப்புடையது. அதுவே ஐந்தெழுத்தின் பெருமை உணர்த்துவது. அதில் ஒரு பாடல் பாடுவாயாக!

**மாணவன்**:

"மற்றுப்பற்றெனக் கின்றி நின்றிருப்
பாதமே மனம் பாவித்தேன்.
பெற்றலும் பிறந்தேன் இனிப்பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினும்
சொல்லுநா நமசிவாயவே"

**தேவி**: வெகு நன்றாக இருக்கின்றது. அத் தேவாரம் கருத்துக்கள் நிறைந்தது. சிவன் அன்பர்களுக்கு நல்ல நாள் தீய நாள் என்பது இல்லை என்றும் கூறுகிற தல்லவா?

**மாணவன்**: தாயே! மிகவும் நன்றி. கொங்கு நாட்டில் சமணம் சில காலம் இருந்ததாகச் சொல்லுகிறார்களே. அதற்கும் நின் பள்ளத்தாக்குக்கும் தொடர்பு உண்டா?

**தேவி**: அடுத்து இல்லாவிடினும் சிறிது தொலைவில் உண்டு. பூந்துறை நாடு மிக வறட்சியுடையது. அந்த வறட்சியைப் பின்பற்றி சமயத்திலும் வறட்சி ஏற்பட்டது. அப்போது சமணம் புகுந்து சிறிது தவிப்பு ஏற்பட்டது. ஆனால், அவர்கள் இலக்கியத்தில் பல நன்மைகள் செய்திருக்கிறார்கள். அது போற்றத்தக்கது.

**மாணவன்**: தேவி! கொங்குவேள் மாக்கதை, நன்னூல் முதலிய நூல்கள்தான் இச்சிறப்பை ஊட்டுகின்றன.

**தேவி**: ஆமாம். மாக்கதை எழுதிய கொங்குவேள் விசயமங்கலத்திலும் நன்னூல் எழுதிய பவணந்தி சீனாபுரத்திலும் இருந்தனர். அவர்களுடைய உதவி தமிழுக்கு மிக இருந்தது.

**மாணவன்**: இவர்களுக்குக் கோயில்கள் இருந்திருக்க வேண்டுமே?

**தேவி**: ஆம். பூந்துறை நாட்டில், விஜயமங்கலம், அரசண்ணாமலை, திங்களூர், வெள்ளோடு, பூந்துறை, சீனாபுரம் முதலிய ஊர்களில் பண்டைய சமணர் கோயில்கள் இன்னமும் இருக்கின்றன. கொங்கு மண்டல சதகம் எழுதிய கார்மேகக் கவிஞரும் சமணரே.

**மாணவன்**: இக்கோயில்களை நாட்டு மக்கள்

ஆதரித்தார்களா?

**தேவி**: ஆம். பொது மக்களுக்கு எல்லாக் கோயில்களும் ஒன்றுதான். சமரசபாவனை மிக அதிகம். தெரிந்தால் வேறு வகையாகும்.

---

## காட்சி 16 ] [ முடிப்புரை

**மாணவன்**: தேவி! இன்று நான் மிகுந்த பாக்கியசாலி. எத்தனை அரும் பெரும் செய்திகள் தெரிந்து கொண் டேன். "யான் செய்த தவம் உலகில் யார் செய்தார்" என்று சொல்லிக்கொண்டு பெருமிதம் அடைவேன்.

**தேவி**: அருமைக் குழந்தாய். உன்னுடைய நற்குணமும் உழைப்பும் அறிவைப் பெருக்க வேண்டும் என்ற விருப் பமும் என்னை உன்னிடம் இழுத்தது. நீ இதுமுதல் நன்றாக அறிவு பெற்றுத் தமிழ் கற்று நீயும் சிறந்து பிறருக்கும் சிறப்பினை அருளுவாயாக. உனக்கு நலம் உண்டாகுக. சாந்தி பெருகுக. குணம் கூருக.



# பிற்சேர்க்கை

## I. மலை முடிகள்:

போளுவாம்பட்டிப் பள்ளத்தாக்கில் அதனை முப்புறமும் வளைத்துக்கொண்டு நிற்கும் மலைத்தொடரில் அடியிற் கண்ட முடிகள் இருக்கின்றன.

**தென்பகுதி:**

(1) தர்மலிங்கம் மலை ... 2070'
(2) எட்டிமடை மலை ... 2555'
(3) ஐயாசாமி மலை ... 3650'
(4) ஒரத்திமலை .... 3723'
(5) கூத்தாண்டி மலை 4115'
(6) குச்சி மலை 3450

**மேற்பகுதி:**

(1) அத்திமலை 3681'
(2) கரி மலை 6550' (குஞ்சரமுடி.5962')
(3) பொறத்தி மலை 3458' (இதன் மேற்புறம் சிறுவானி)
(4) வெள்ளிங்கிரி முக்கை 3940''
(5) வெள்ளிங்கிரி சுவாமிமலை. 5912' (கோயில் 5900; ஆண்டிகளை அருவி 4986)
(6) தும்பி முடி 4453'
(7) வரடி மலை 4223

**வடபகுதி:**

(1) இடிஞ்ச மலை ..... 3176'
(2) பெருமாள் முடி .... ---
(3) மருதமலைக் கோயில் .... 2500

II. **ஆறுகள்:**

**நொய்யல் ஆற்றின் துணை நதிகளாவன**

(1) பெரியாறு (கரிய மலையில் தோன்றுவது)
(2) சின்னாறு (கொடுவாய்ப் பள்ளம், நந்தன் கரைப் பள்ளம் இரண்டும் கூடியது இவ் வாறாகும். சாடியம்மன் கோயிலும் குகையும் உண்டு)
(3) இருட்டுப் பள்ளம்
(4) சுவாமி முடியாறு (வெள்ளிங்கிரியில் தோன்றுவது)
(5) ஆனையாறு (பொறத்தி மலையில் தோன்றுவது சிறுவானி நீர்த் தேக்கம் இதில் வந்து சேருகிறது)
(6) பூண்டியாறு
(7) காஞ்சிமா நதி (முட்டம் நாகீசுவரர் கோயிலருகில் ஓடுவது)
(8) நீலிவாய்க்கால் (இதில் ஒரு சிறு நீர் வீழ்ச்சியும் உண்டு)

இவைகளைத் தவிர காட்டாறுகளாக ஓரத்திப் பள்ளம், ஐயாசாமி மலைப் பள்ளம் இவைகள் தெற்கிலிருந்தும், ஆனைப் பள்ளம், பாம்பாட்டிப் பள்ளம், மருதமலையிலிருந்தும், சங்கனூர்ப் பள்ளம்

தடாகப் பள்ளத் தாக்கிலிருந்தும் நொய்யல் ஆற்றில் வந்து சேருகின்றன.

### III. அணைகளும் வாய்க்கால்களும்.

நொய்யல் சிறிய ஆறான போதிலும் இதற்குப் பண்டைக்கால முதற்கொண்டே 32 அணைகள் கட்டப்பட்டு அவைகளிலிருந்து கால்வாய்கள் வெட்டப்பட்டன.

**(1) மேற்பகுதி.**

(1) சீதாபதி
(2) கொடுவாய்ப் பூடி
(3) முசராம்பூர்
(4) இருட்டுப்பள்ளம்
(5) முடந்துறை
(6) சுந்தரம்
(7) நீலி
(8) பூதிக்காடு
(9) சித்திரச் சாவடி
(10) குணியமுத்தூர்.
(11) கோயமுத்தூர்
(12) குறிச்சி
(13) வெள்ளலூர்
(14) சிங்காநல்லூர்

இவைகள் (1) செம்மேட்டுக் குளம், (நீலி வாய்க்கால்) (2) பேரூர்க்குளம், சுண்டக்காய்முத்தூர்க் குளம், (சித்திர சாவடித் தென்வாய்க்கால்) (3) வேடப்பட்டி முதலிய 7

குளங்கள் (சித்திர சாவடி வடவாய்க்கால்) (4) பெரிய குளம், வாலாங்குளம், புலியகுளம் (இராச வாய்க்கால்) (5) குறிச்சிக் குளம் (தென்வாய்க்கால்) (6) சிங்காநல்லூர்க் குளம் (வட வாய்க்கால்) (7) வெள்ளலூர்க் குளம் (சங்கிலிக் கறுப்பன் வாய்க்கால்)

**(2) இடைப் பகுதி.**

அணைகள்.

| | |
|---|---|
| (1) பள்ளபாளையம் | (10) அக்கிரகாரபுதூர் |
| (2) இருகூர் | (11) மங்கலம் |
| (3) சூலூர் | (12) ஆண்டிபாளையம் |
| (4) இராசிபாளையம் | (13) திருப்பூர் |
| (5) மடப்பூர் | (14) மண்ணறை |
| (6) சாமலாபுரம் | (15) முதலிபாளையம் |
| (7) கருமுத்தாம்பட்டி | (16) ஆனைபாளையம் |
| (8) பள்ளபாளையம் | (17) காத்தாங்காணி |
| (9) சீமண்டாம்பாளையம் | |

இவைகளிலிருந்து சூலூர், சாமளாபுரம், கூளிப்பாளையம் முதலிய குளங்கள் நிரம்புகின்றன, இப்பகு தியில் மூன்று துணை ஆறுகள் நொய்யலுடன் சேருகின்றன. (1) திருப்பூர் (2) வண்ணாற்றங்கரை (3) நள்ளாறு.

**(3) கடைப் பகுதி.**

ஆற்றின் கடைப்பகுதி ஈரோடு, தாராபுரம் தாலூக்காக்களின் இடையில் செல்லுகின்றது.

இப்பகுதியில் துணையாறுகளோ அணைக் கட்டுகளோ, கால்வாய்களோ இல்லை. மழைக் காலங்களைத் தவிர நீரோட்டம் இல்லை.

(a) நொய்யலாற்றின்மீது 6 இடங்களில் பாலங்கள் உண்டு.

(1) செம்மேடு (2) பேரூர் (3) கோவை
(4) ஒண்டிப்புதூர் (5) திருப்பூர் (6) பழையகோட்டை

(b) இருப்புப் பாதைப் பாலங்கள் இரண்டு.

(1) போத்தனூர் (2) நொய்யல்.



நூலின் புரவலர்கள்
ரூ.75/ மதிப்புள்ள இந்நூல் திரு. **கி.சண்முகம்** - முனைவர்.**வெ.இராசேசுவரி** அவர்களின் பொருளுதவியால் வெளியிடப்படுகிறது.